(3) THE MADRAS GENERAL SALES TAX (EMERGENCY PROVISIONS) BILL, 1958.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I beg to move—

"That leave be granted to introduce the Madras General Sales Tax (Emergency Provisions) Bill, 1958."

MR. SPEAKER : The question is—

"That leave be granted to introduce the Madras General Sales Tax (Emergency Provisions) Bill, 1958."

The motion was put and carried and leave was granted.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I introduce the Madras General Sales Tax (Emergency Provisions) Bill, 1958.

(4) THE MADRAS BHOODAN YAGNA BILL, 1957 (L.A. BILL NO. 15 OF 1957).

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Mr. Speaker, Sir, I beg to move—

"That the Madras Bhoodan Yagna Bill, 1957 (L.A. Bill No. 15 of 1957) as amended by the Joint Select Committee be taken into consideration".

Sir, I shall briefly explain the main changes made by the Joint Select Committee to the various clauses of the Bill. The preamble has been amplified so as to include the provisions relating to the Gramdan villages and Gramdan lands under the purview of the Bill.

In the definitions in clause 2 of the Bill, new definitions for Gramdan lands, Gramdan villages and Sarvodaya Panchayat have been added. The definition relating to the landless poor person has been amplified to be more specific. The Committee decided to recast sub-clause (1) of clause 4 of the Bill, so as to provide that the State Board shall consist of a Chairman and 10 or more but not exceeding 14 members, to be appointed by the Government in consultation with Sri Acharya Vinoba Bhave or a person nominated by him in this behalf. Consequently, sub-clause (2) of clause 4 of the Bill has been omitted. Just as there is a provision for consulting Sri Acharya Vinoba Bhave for the constitution of the State Board, the Committee considered that even for dissolving the Board, Sri Acharya Vinoba Bhave should be consulted. Provision has accordingly been made in clause 10 of the Bill.

Clause 11 of the Bill has been amplified so as to vest all lands donated for Bhoodan Yagna, whether before or after the commencement of the Act. It was also decided to omit sub-clause (2) of clause 11 of the Bill.

The Committee decided to increase the strength of Local Committee under sub-clause (1) of clause 15 from 3 to 5 members.

15th February 1958] [Sri M. Bhaktavatsalam]

As the period of three months fixed for filing of objections under clause 17 (2) of the Bill was considered to be too long, the Committee has suggested that a period of two months will be sufficient. Clause 17 (2) has accordingly been amended.

The Committee decided to include a provision in the Bill to the effect that as far as possible the wishes of the donor will be taken into consideration in the distribution of lands. It also decided that the approval of the Government was not necessary for distribution of lands. Clause 19 (1) has been suitably amended and old sub-clause (2) of clause 19 has been omitted. The Committee desired that three months instead of six months would be sufficient for instituting Civil Suits under clause 23. The clause has been amended accordingly.

The original Bill did not contain any provision about Gramdan lands. As the Committee desired to include in the Bill, provisions relating to Gramdan lands also, new clauses 25 and 26 have been inserted for vesting in and the management of the Gramdan lands by the Sarvodaya Panchayat. A new clause 27 has been added empowering the State Board to make regulations for the conduct of business. Provision has also been made for placing copies of the Rules and Notifications issued under this Act on the table of both the Houses.

Sir, I now commend that the Bill as amended by the Joint Select Committee be taken into consideration.

MR. SPEAKER : Motion moved—

"That the Madras Bhoodan Yagna Bill, 1957 (L.A. Bill No. 15 of 1957), as amended by the Joint Select Committee be taken into consideration".

**The Bill is before the House for discussion. If any Member wants to speak, he will please stand in his seat or send me a note.**

SRI P. G. KARUTHIRUMAN : கனம் சபாநாயகர் அவர்களே, 9-55 a.m.
கூட்டுப் பொறுக்குக் கமிட்டியால் சமர்ப்பிக்கப்பட்ட இந்தப் பூதான யக்ஞ மசோதாவை நான் ஆதரிக்கின்றேன். 1952-ம் வருஷத்திலே பூஜ்ய வினோபா அவர்கள் இந்தப் பூதான வேள்வியை ஆரம்பித்தார்கள். அது நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து, மக்களுடைய மனதிலும் அதனுடைய கருத்துக்களெல்லாம் ஒன்றிப் பாவி, மாபெரும் இயக்கமாக வளர்ந்து, இப்பொழுது இந்தியா பூராவும், எல்லா இடங்களிலும் அதற்குப் பூரண ஆதரவு இருக்கிறது. நம் தேச பிதா மகாத்மா காந்தியடிகளின் வழியிலே வந்த அவர்கள், அவருடைய ஆத்மீக வாரிசாக அமைந்த அவர்கள், மிகவும் சிறந்த ஒரு பணியை ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.

மகாத்மா காந்தியடிகளின் கருத்து "ஊருணி நீர்நிறைந் தற்றே உலக வாம் பேரறி வாளன் திரு" என்று "ஒப்புரவறிதல்" என்னும் அதிகாரத்தில் வரும் திருவள்ளுவருடைய கருத்தை ஒத்திருக்கிறது. ஊரிலுள்ள பொதுக் கிணற்றின் தண்ணீர் எப்படி எல்லோருக்கும் பிரயோஜனப்

படுகிறதோ, அது போல் ஒருவருடைய செல்வம் எல்லோருக்கும் பயன்படக் கூடிய வகையிலே அமையவேண்டும். ஒருவரிடம் செல்வம் இருப்பதைப் பற்றி ஆட்சேபணை இல்லை. ஆனால், அந்தச் செல்வமும் சொத்தும் எல்லோருக்கும் பயன்படவேண்டும். எல்லோரும் தம் தம்முடைய சொத்துக்கு தர்மகர்த்தாக்களாக இருக்கவேண்டுமென்று தேச பிதா மகாத்மா காந்தி அவர்கள் அருளிச் செய்தார்கள். அந்த வழியிலே வந்த பூஜ்ய வினோபா அர்கள் இப்பொழுது இருக்கும்படியான நிலையிலே ஆண்டவனுடைய படைப்பெல்லாம், கடவுள் தத்துவத்திலே, அறத்திலே மிகவும் ஆக்கத்தைக் காட்ட வேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். "அறத்தினூஉங் காக்கமும் இல்லை அதனை மறத்தலின் ஊங்கில்லை கேடு" என்று வள்ளுவர் வகுத்துக் கூறிய வகையிலே, கடவுள் தன்மையிலே, கடவுளுடைய உயரிய ஒரு கொள்கையிலே, எல்லா உயிர்களும் நன்றாக வாழ வேண்டும், எல்லோருடைய பண்பாடும் உயர்ந்திருக்க வேண்டுமென்பதற்கு வழிகாட்டியாகத்தான் வினோபா அவர்கள் அமைந்திருக்கிறார்கள்.

அதோடு மட்டுமல்ல. ஈகையில் சிறந்தவர்கள்தான் எப்பொழுதும் இருப்பவர்கள். ஈகைதான் சிறந்தது என்ற கருத்தை கம்பநாட்டாழ்வார்

"மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கண் மாயாது
ஏந்திய கைக்கொ டிரந்தவ ரெந்தாய்
வீந்தவ ரென்பவர் வீந்தவ ரேனும்
ஈந்தவ ரல்ல திருந்தவர் யாரே"

என்று வெகு அழகாகக் கூறியதை வினோபாஜி அவர்கள் அனுதினமும் செய்து வருகிறார்கள். மேற்படி பாடலில் யார் உண்மையிலேயே உயிருடன் வாழ்பவர்கள், யார் உயிருடன் இருந்தும் இறந்தவர்கள் என்பதைச் சொல்லியிருக்கிறார்கள். இறந்தவர்கள் எல்லாம் இறந்தவர்கள் அல்லர்; உயிருடன் இருப்பவர்கள் எல்லாம் உயிருடன் இருப்பதாகக் கருதப்படமாட்டார்கள்—நல்ல காரியம் செய்யாதிருக்கும் வரைக்கும். யார் யாசித்துத் தின்கிறார்களோ, அவர்கள் உயிருடன் இருப்பினும் இறந்தவர்களே. ஆனால், ஈகையிலே யார் சிறந்தவர்களோ யார் தங்களிடத்திலே இருக்கும் செல்வங்களையெல்லாம் பிறருக்குக் கொடுத்து வருகிறார்களோ, அவர்கள் தான் என்றென்றும் நிலையாக இருப்பவர்கள் என்று சொல்லியிருக்கிறார்கள். "மாயாது ஏந்திய கைகொடு இரந்தவர் வீந்தவர் என்பவர்" என்று சொல்லும்போது, உயிருடன் இருப்பவர்களாக இருந்தாலும் சரி, எந்த விதமான காரியமில்லாமல் கஷ்டப்பட்டுக்கொண்டு, யாசித்து உண்பவர்கள் எல்லாம் நடைப்பிணங்கள் என்று குறிப்பிட்டுள்ளார்கள். நடைப் பிணங்களைக்கூட உயர்ந்தவர்கள் என்று குறிப்பிடுகிறார். எப்பொழுது? அவர்கள் ஈகையிலே சிறந்தவர்களாக இருந்தால். எப்பொழுதும் ஈகையிலே நிலைத்திருப்பார்கள் என்று கூறுவதற்கிணங்க பூதான வேள்வியை மேற்கொண்டிருக்கிறார் பூஜ்ய வினோபா அவர்கள். ஆகவே இவர்கள் இருக்கும்படியான இந்த இயக்கம் பல்வேறு கருத்துக்கள் கொண்டதாக இருக்கலாம். ஓர் உயர்ந்த கருத்தைச் சொல்லும்படியான சமயத்தில் அது பரவுவதற்கு பெரிய ஊழியம் தேவை. அந்த உயர்ந்த கருத்துக்கள், நல்ல கருத்துக்கள் மக்கள் இதயத்தில் தைக்கும்படியான நிலைமையில், மக்கள் ஏற்றுக் கொள்ளும்படியான முறையில் ஊர் ஊராக, கிராமம் கிராமமாகச் சென்று இடைவிடாது சேவை புரிந்துவரும் பெரியார் ஸ்ரீ வினோபாஜி அவர்கள். அவர் பெரிய உயர்ந்த ஞானியாக இருந்தாலும் கூட, நாட்டு மக்களின் நன்மைக்காக இறங்கிவந்து உண்மையான உயர்ந்த தத்துவங்களை எல்லாம் உபதேசம் செய்து வருகிறார். இந்த மெய்ஞானியின் தத்துவத்தைக் காணுமிடத்து கம்பனது பாட்டு நினைவுக்கு வருகிறது.

"மறுமை கண்டமெஞ் ஞானியா ஞாலத்து வரினும்
வெறுமை கண்டபின் யாவரும் யாரென விரும்பார்
குறுமை கண்டவர் கொழுங்கன லென்னினுங் கூசார்
சிறுமை கண்டவர் பெருமைகண் டல்லது தேறார்".

என்று சொல்லியிருக்கிறார்கள். ஆகவே இந்த பூதான வேள்வி உருவத்தில் சிறிதாக இருக்கலாம், விரிந்து வரும்படியான சமயத்தில் எவ்வளவு

தூரம் மக்களிடத்தில் பரவி இருக்கிறது என்பதற்கு அத்தாட்சியாக பல்லாயிரக்கணக்கான கிராமங்கள் இன்றைக்கு இதற்குக் கிடைத்திருக்கிறது. பல லட்சக்கணக்கான ஏக்கர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. சமீபத்தில் பூஜ்யர் விஞேபாஜி அவர்களின் 63-வது ஜெயந்தி விழாவின்போது கீழ்பவானி பிரதேசத்தில் இருக்கும்படியான கிராமங்களில்—காமராஜர் அவர்கள் வந்திருந்தார்கள், முதலாவது தானமாக சர்க்காரிடத்தில் இருக்கும்படியான பூமியை—ஆயிரகணக்கான ஏக்கர்கள் கொடுத்து இருக்கிருர்கள். அதை வரவேற்கிறேன். எந்த இடத்திலும் நிலம் இல்லை என்று சொல்லும் படியான நிலைமையே ஏற்படவில்லை.

(இந்தச் சமயத்தில் ஸ்ரீ டேனியல் சபாநாயகரின் ஆசனத்தில் அமர்ந்தார்.)

இப்போது நம்முடைய தமிழ்நாட்டில் முதலாவதாகக் கொண்டுவந்த மசோதா பூமியைக் கொடுத்ததோடு மட்டுமிருந்தது. கிராமதானம் வளர்ந்து நூற்றுக்கணக்கான கிராமங்கள் வந்து சேர்ந்த காரணத்தால் சட்டம் அவசியம் இல்லை. பூஜ்யர் விஞேபாஜி அவர்களுடைய கருத்து நிலச்சீர்திருத்தம் வேண்டுமென்று சொல்கிருர்கள். நிலச்சீர்திருத்தம் சட்டம் கொண்டுவந்தாலும் கூட மக்களுடைய மனத்தில் இரக்கம் பிறக்க வேண்டும், கருணை பிறக்கவேண்டும் அதற்கான சூழ்நிலையை நாட்டில் ஏற்படுத்தவேண்டும் என்பதுதான் முக்கியமான விஷயம். ஓரளவு சட்டம் அவசியம்தான். சட்டத்தை வைத்துக்கொண்டு பூமியை வாங்குவதைவிட சட்டத்தைக் காட்டி மக்களிடத்திலிருந்து நிலத்தைப் பிடுங்குவதற்குப் பதிலாக, கிராம மக்களாகவே மனம் மாறி விருப்போடு கொடுக்கிற நிலங்களை சட்டத்தை வைத்துக்கொண்டு நல்ல முறையில் பிரித்து விநியோகிக்கத் தான் ஏற்பாடு செய்யப்படுகிறது.

இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னுல் நமது திருவள்ளுவர் சொன்ன உயர்ந்த அரிதான கருத்துக்களைத்தான் இன்றைக்கு பூஜ்யர் விஞேபாஜி அவர்கள் சொல்லிவருகிருர்கள். ஈகையில் உயர்ந்தது பூதானம் என்கிருர் வள்ளுவர் "ஈதல் இசைபட வாழ்தல் அது அல்லது ஊதியம் இல்லை உயிர்க்கு" என்று கூறியிருக்கிருர். ஆங்காங்கு இருக்கும்படியான வழிமுறைகளுக்கு ஏற்ப இந்தச் சட்டம் அமையவேண்டும் என்பதற்காகத்தான் நான் இரண்டாவது ஷரத்துக்கு திருத்தம் கொடுத்திருக்கிறேன். இந்தத் திருத்தத்தை சர்க்கார் ஏற்றுக்கொள்வார்கள் என்று நம்புகிறேன். பூஜ்யர் விஞேபாஜி ஆரம்பித்திருக்கும் பூதான வேள்வியில் கட்சி வித்தியாசம் இல்லாமல் எல்லோரும் பங்குகொண்டு அந்த வேள்வியை வெற்றிகரமாக முடிக்கவேண்டும் என்பதற்காகக் கேட்டுக்கொண்டு என்னுடைய சிற்றுரையை முடித்துக்கொள்கிறேன்.

**SRI K. B. S. MANI**: தலைவர் அவர்களே, இந்த பூமிதான இயக்கத்தை ஏன் ஆரம்பிக்கவேண்டும், எதற்காக இந்த நாட்டில் ஆரம்பிக்க வேண்டும், 10-5 a.m. அதற்கான காரணம் என்ன என்பதைப்பற்றி விளக்க விரும்புகிறேன். உலகம் தோன்றிய நாள் முதலாகவே ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய சிரமத்திற்குத் தகுந்த முறையில் நிலம் வைத்துக்கொண்டிருந்தான். அதற்குப் பிறகு மனிதனது ஆசை விரிய அவன் பேராசைக்காரனுக மாறி பிறருடைய நிலங்களையும் கூட அடித்துக் கட்டிக்கொண்டு வாழ ஆரம்பித்தான். இதன் காரணமாக உலகத்தில் பலவிதமான கட்சிகள், சண்டைகள், புரட்சிகள் எல்லாம் ஆரம்பமாகிவிட்டன. வலுவுள்ளவன் வலுவற்றவனை அழிக்க முற்பட்டான். இந்தக் கொடுமையான புரட்சிகள் நம் நாட்டிலும் பரவாமல் இருப்பதற்காக, நில ஆதிக்க மனப்பான்மையை ஒழிக்க வேண்டி, மக்களுடைய மனோபாவத்தில் சீர்திருத்தம் உண்டாகவேண்டும் என்பதற்காக, ஸ்ரீ விஞேபாஜி அவர்கள் இந்த இயக்கத்தை ஆரம்பித்தார்கள். கடவுளைப் பற்றியும், ஆண்டவனைப்பற்றியும் நம்பி, தானம் செய்வது உயர்ந்தது என்கிற நம்பிக்கையுடைய இந்நாட்டு மக்களிடத்திலே உங்கள் நிலத்தை தானம் செய்யுங்கள் என வேண்டி

வாங்க ஆரம்பித்தார் ஸ்ரீ விநோபாஜி. தமிழ்நாட்டிலே பூதான இயக்கத்தை ஆரம்பிக்கவேண்டிய அவசியம் இல்லையென நினைக்கலாம். என்றுலும் சூழ்நிலையின் காரணமாக நம் நாட்டிலும் ஆரம்பிக்கவேண்டிய நிர்ப்பந்தம் உண்டாகிவிட்டது. பூதான இயக்கம் என்ற சொல்லிலிருந்தே பூமியைத் தானமாகக் கொடுப்பது என்று அர்த்தமாகிறது. அரசாங்கம்—எல்லோரும் நிலத்தைக் கொடுத்துவிடவேண்டும் என்று ஓர் உத்திரவு போடலாம். அது இன்றைய நிலைமைக்குச் சரியில்லை என்ற காரணத்தினுல் அதை ஓர் இயக்கமாக ஆரம்பித்து, இதன் நன்மைகளை எடுத்து மக்களிடத்தில் சொல்லி சமாதானமான முறையில் மனமாற்றம் உண்டாக வழி செய்வதுதான் இந்தத் திட்டத்தின் அடிப்படை. இதில் பலவிதமான அபிப்பிராய பேதங்கள் இருக்கலாம். நம்மிடம் இருக்கும் நிலத்தை எதற்காகக் கொடுக்க வேண்டும் என்கிற கேள்வி எழலாம். இந்த உலகமும் உலகிலுள்ள பூமியும் யாருக்குச் சொந்தம் என்று நினைப்பாரும் இருக்கலாம்.

பெரியோர்கள் அன்பு வழியை மனதில் வைத்துக்கொண்டு அவ்வாறு கூறியிருக்கிருர்கள். எந்த வழியில் நடந்தால் ஆண்டவனின் அன்பிற்குப்பாத்திரம் ஆவோம் என்று சொல்லியிருக்கிருர்கள். சாஸ்திரங்களிலும், புராணங்களிலும் அன்பு வழியைத்தான் கூறி இருக்கிருர்கள். ஹிந்து மதத்தில் வேதத்திலே என்ன கூறியிருக்கிருர்கள் "ஓம் தத் சத்" என்று கூறி இருக்கிருர்கள். அதில் என்ன கோட்பாடுகள் அடங்கியிருக்கின்றன என்று கவனிக்கவேண்டும். ஆண்டவன் எங்கும் நிறைந்தவன் அவன் கருணையினுல்தான் எல்லாம் நிறைந்திருக்கிறதென்பதைப் பார்க்கிருேம். அதை உணர்ந்து அந்த அடிப்படையிலே ஒவ்வொரு காரியத்தையும் நாம் செய்ய வேண்டும். மேலும் "அனல் ஹக்" என்றும் கூறப்பட்டிருக்கிறது. அனல் ஹக் என்ருல் உண்மையை நாம் எப்பொழுதும் கடைப்பிடிக்கவேண்டும் என்று அர்த்தம். உண்மையைக் கடைப்பிடித்தால்தான் நாம் ஆண்டவன் அன்பிற்கு பாத்திரம் ஆவோம். யாருடைய மனதிலே அன்பு இருக்கிறதோ, உண்மை இருக்கிறதோ, அங்கேதான் ஒழுக்கும் இருக்கும். அதற்குத்தான் பெரியோர்கள் "ஓம் தத் சத்" என்றும் "அனல் ஹக்" என்று சொல்லி வந்தார்கள்.

சட்டத்தின் மூலமாக நாம் எதையும் செய்துவிட முடியாது. பொது மக்களுக்கு ஆத்மஞானம் இருந்தால்தான் அவைகளை கடைப்பிடித்து நடக்கமுடியும். இந்த அடிப்படையிலேதான் ஸ்ரீ விநோபாஜி அவர்களும் தன்னைப் போல் பிறரும் வாழவேண்டும் என்ற எண்ணம் மக்கள் மனதிலே உதிக்கவேண்டும் என்றுதான் இந்த இயக்கத்தை நடத்தி வருகிருர். மேலும் விவசாயத்தை மக்கள் நல்லமுறையில் உபயோகப்படுத்தவேண்டும், நன்ருக வாழவேண்டும் என்ற கருத்துடன்தான் ஸ்ரீ விநோபாஜி அவர்கள் இந்த பூமிதான யக்ஞத்தை ஆரம்பித்தார்கள். இதை உணர்ந்து நடப்பது தமிழ் மக்களின் முதல் கடமையாக இருக்கவேண்டும். அவர்கள் இந்த நல்ல எண்ணத்தை மனதிலே கொண்டுதான், இதை அவர்களின் கடமையாகக் கொண்டு கால்நடையாகவே சுற்றுப்பிரயாணம் செய்து வருகிருர்கள். ஆண்டவன் மீது நம்பிக்கை உள்ளவர்களுக்கு தன்னைப்போல் பிறரும் வாழவேண்டும் என்ற எண்ணம் தான் அவர்களின் உள்ளத்தில் இருக்கும். ஆகவே அந்த உள்ளத்துடன் தான் தங்களின் நிலத்தை தானமாகக் கொடுக்கவேண்டும். அவ்வாறு கொடுத்தால் அவர்கள் ஆண்டவனைப்பற்றி உணர்வார்கள் என்ற கருத்துடன்தான் ஸ்ரீ விநோபாஜி அவர்கள் இந்த இயக்கத்தை தமிழ் நாட்டில் ஆரம்பித்திருக்கிருர்கள். இது பிறகு கிராமதான இயக்கமாகவும் மாறியது.

உண்மையாகப் பார்க்கப்போனுல் இப்பொழுது கிராமதானமாக கொடுப்பவர்கள் எல்லாம், மகாராஜாக்களிடமிருந்து பெற்ற நிலங்கள்தான். அவர்கள் சொந்தமாக சம்பாதித்த நிலம் என்பதே கிடையாது. இப்பொழுது ஜமீன்தார்கள் கிராமதானம் கொடுத்தார்கள் என்ருல் அவர்கள் ஏதோ தங்கள் சொந்த நிலத்தைக் கொடுத்ததாக இருமாப்பு அடைய வேண்டியதில்லை. சில சமயங்களில் பார்த்தால் அந்த நிலங்கள் எப்படி வந்தது என்று கூடத் தெரியாமல் இருக்கும். அவர்களின் சொந்த

உழைப்பால் பெற்ற நிலங்கள் அல்ல. ஆனால் அவர்கள் பிறருக்குக் கொடுக்கும்போது ஏதோ பிச்சை கொடுப்பதாக நினைக்கிறார்கள். அதனால் தான் அவர்கள் ஒன்றுக்கும் பிரயோஜனமில்லாத காட்டுப்பிரதேசத்தில் உள்ள நிலங்களையும், மலைப் பிரதேசத்தில் உள்ள நிலங்களையும் கொடுக்கிறார்கள். அந்த காலத்திலே இவர்களும் பிறரிடமிருந்து பெற்ற நிலங்களைக் கொடுக்கிறார்களே தவிர தங்கள் உழைப்பில் இருந்து வாங்கிய ஒரு ஏக்கர் நிலத்தைக்கூட கொடுக்கவில்லை.

இப்படி பூமிதானமாக கொடுக்கப்பட்ட நிலங்களில் ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்கள் தரிசாக இருக்கின்றன. பொது மராமத்து இலாகா (ஹைவேஸ்) என்ஜினியர்களின் அபிப்பிராய பேதத்தினால் எந்தவிதமான பிரயோஜனமும் இல்லாமல் இருக்கின்றன. ஆகவே அம்மாதிரி நிலங்களை பூமிதான இயக்கத்தில் கொண்டுவந்து அதைப் பண்படுத்தவேண்டும். அதோடு இப்பொழுது நிலைமை எப்படி இருக்கிறதென்றால் சர்க்காருக்குச் சொந்தமான நிலங்களைக் கூட இந்த ஜமீன்தார்கள் ஆக்கிரமித்துக்கொண்டு அதில் உணவு உற்பத்தி செய்து பெரிய அளவில் லாபம் அடைந்து வருகிறார்கள். அவ்வாறு அவர்கள் ஆக்கிரமித்துக்கொண்ட நிலங்களை சர்க்கார் ஆர்ஜிதம் செய்து அந்த நிலங்களையும் சட்டத்தின் கீழ் கொண்டுவரவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஏனென்றால், இது அவர்களுடைய சொத்து அல்ல, அவர்களுடைய ஆதிக்கத்திலிருந்தது அல்ல. அது சர்க்காருக்குச் சொந்தமானது என்ற அடிப்படையில் அதுவும் சேர்க்கப்படவேண்டும். அப்படிச் சேர்க்கப்பட்டால், நாட்டில் 70 சதவிகித மக்களுக்கு நிலம் கிடைத்து, அவர்கள் நிலத்தில் உழுது விவசாயம் செய்வதற்கான வாய்ப்பு ஏற்படும்.

இந்த இயக்கத்தை ஆதரிக்கும் முறையில் கட்சிபேதமோ, மத பேதமோ, ஜாதிபேதமோ யாரும் கொள்ளக்கூடாது. அத்தகைய பேதங்களை இந்த இயக்கத்தில் புகுத்தக்கூடாது. அதுதான் இந்த இயக்கத்தில் கவனிக்க வேண்டிய முக்கிய தத்துவம். நிலங்களைக் கொடுக்கும்போது, கிருஸ்தவ மதத்திற்கு மாறியவர்கள், முகம்மதிய மதத்திற்கு மாறியவர்கள் முதலியவர்களைக் குறித்து பாரபட்சம் காட்டக்கூடாது. அம்மாதிரியான பாகுபாடு செய்யக்கூடாது. "இவர் ஐயர்; இவர் நிலத்தில் இறங்கி விவசாயம் செய்யமாட்டார்'' என்றோ, "இவர் ஆதித்திராவிடர் ; இவர்தான் நிலத்தில் இறங்கி விவசாயம் செய்வார்'' என்றோ பாகுபாடு செய்யக்கூடாது. நிலமில்லாத ஏழைகள் யாராயிருந்தாலும், அவர்கள் வயலில் இறங்கி வேலை செய்யும் பண்பாடு உடையவர்களாக இருந்தால், அவர்களுக்கு நிலம் கொடுக்கவேண்டும். அந்த வகையில் சட்டமியற்ற வேண்டும். இந்தக் காலத்தில் உழவுத் தொழில் மிகக் கேவலமாகக் கருதப்பட்டுவருகிறது. சாதாரணமாக, ஒருவனை விவசாயி என்று சொன்னால், அவனை "நாட்டான்" என்று சொல்லி எள்ளி நகையாடும் மனப்பான்மை பட்டிணத்தில் நிலவி வருகிறது. இந்த மனப்பான்மை அகல வேண்டும். இந்த மனப்பான்மையை அகற்ற வேண்டுமானால், நான் கூறியபடி, வேறுபாடுகள் பாராட்டாமல் நிலமில்லாத ஏழை விவசாயிகளுக்கு நிலம் கொடுக்கவேண்டும். இந்த இயக்கத்தில், ஜாதி வித்தியாசமோ, உயர்வு தாழ்வு என்ற வித்தியாசமோ, ஏழை பணக்காரர் என்ற வித்தியாசமோ, பிற்பட்டவர்கள் முன்னேறியவர்கள், என்ற வித்தியாசமோ பாராட்டக்கூடாது. இந்த இயக்கத்திற்கு மேலும் ஆதரவு தந்து இதை வளர்ப்பதற்கு ஆவன செய்யுமாறு சர்க்காரைக் கேட்டுக்கொள்வதுடன், பேசுவதற்கு எனக்கு சந்தர்ப்பமளித்த தங்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

**Sri A. R. MARIMUTHU :** *தலைவர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்களால் இங்கே கொண்டுவரப்பட்டுள்ள பூதான யக்ஞ மசோதாவை ஆதரிக்கிறேன்.* 10-22 a.m. பூதானத்தை பெற்று நிலமில்லாத ஏழைகளுக்கு நிலத்தைக் கொடுக்க வேண்டுமென்ற நோக்கத்துடன்மட்டுமின்றி சமூகத்தில் தான் வாழ வேண்டுமென்றும், தான் வளர வேண்டுமென்றும் உள்ள மனப்பான்மையைக் குறைத்து, எல்லா மக்களும் வாழ வேண்டுமென்ற சமூக நல

உணர்ச்சியை எல்லா மக்களுக்கும் உண்டாக்க வேண்டுமென்ற நோக்கத்துடனும் பூதான யக்ஞத்தை விநோபாஜி ஆரம்பித்தார். பூதான இயக்கம் வளர்ந்து அது நாளடைவில் கிராமதான இயக்கமாக மாறியிருக்கிறது. நம் நாட்டில் நிலமில்லாதவர்களின் பிரச்னையை பூதானத்தின் மூலம் தீர்த்துவிட முடியாது என்பதை அனுபவத்தின் வாயிலாகக் கண்ட விநோபாஜி அதை கிராமதானத்தின் மூலம்தான் தீர்க்கமுடியும் என்று உணர்ந்து கிராமதான யக்ஞத்தை ஆரம்பித்து நடத்திவருகிறார்கள். நம் நாட்டிலுள்ள அரசியல் கட்சிகள் அத்தனையும், சோஷலிஸம்தான் இந்த நாட்டுக்குத் தேவை என்பதை ஒப்புக்கொண்டும், அவ்வாறு பேசிக்கொண்டும் வருகின்றன. ஆனால், துரதிர்ஷ்டவசமாக, விநோபாஜி கூறும் உண்மையான சோஷலிஸ தத்துவத்தின் அடிப்படையில் எந்த அரசியல் கட்சியும் அதன் கோட்பாடுகளை அமைத்துக்கொண்டிருப்பதாகக் கூறமுடியாது. இப்போது, எல்லாக் கட்சிகளும், எல்லாத் தலைவர்களும், நிலவுடமைக்கு உச்ச வரம்பு கட்ட வேண்டுமென்று கூறுகிறார்களே தவிர, நிலம் தனி மனிதனுக்குச் சொந்தமாக இருக்கக்கூடாது என்று யாரும் சொல்லவில்லை. ஆனால், நிலம் தனி மனிதனுக்குச் சொந்தமாக இருக்கக்கூடாது என்ற புரட்சிகரமான கருத்தை விநோபாஜிதான் இப்போது தெரிவித்துவருகிறார். இந்நாட்டில் உற்பத்தி சாதனம் எதுவும் தனி மனிதனுக்குச் சொந்தமாக இருக்கக்கூடாது; உழைப்பவன் உழைப்பின் பலனை அடைய வேண்டுமே தவிர, தனியொரு உழைப்பாளியிடமோ, வேறு எந்தத் தனியொருவனிடமோ உற்பத்தி சாதனம் இருக்கக்கூடாது; ஆனால் உற்பத்தி செய்யும் அத்தனை பேருக்கும் உற்பத்தியாகும் அத்தனை பொருள்களும் வினியோகிக்கப்படவேண்டும். இதுதான் உண்மையான சோஷலிஸ தத்துவம். இந்தத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டுதான் விநோபாஜி பூதான யக்ஞத்தை ஆரம்பித்து நடத்திவருகிறார்கள். நம் நாட்டில் உற்பத்தி சாதனங்களில் ஒன்றாகிய பூமி ஒரு சிலர் கையில் இருக்கிறது. பல ஏழைகளுக்கு நிலம் இல்லை. சட்டபூர்வமாக நிலவுடமைக்கு வரம்பு கட்டினாலும்கூட, நிலப் பிரச்னையைத் தீர்த்தவர்கள் ஆகமாட்டோம்; அப்படி சட்டபூர்வமாகத் தீர்க்கவும் முடியாது. நாட்டிலுள்ள நிலமில்லாத அத்தனை மக்களுக்கும் நிலம் வழங்க முடியும் என்ற தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டதுதான் பூமிதான யக்ஞம். நிலத்தை சமுதாயத்திற்குச் சொந்தமாக ஆக்கிவிட்டால், நாட்டிலுள்ள பெரும் பிரச்னை தீர்க்கப்பட்டதாக ஆகும் என்ற அடிப்படையில்தான் விநோபாஜி பூமிதான யக்ஞத்தை ஆரம்பித்திருக்கிறார்கள்.

மேலும், கிராமங்களிலுள்ளவர்கள் எல்லாவற்றிற்கும் வெளியில் உள்ளவர்களை நம்பியிருக்க வேண்டியிருக்கிறது; அவர்கள் சுயேச்சையாக இயங்கக்கூடிய நிலையில் இல்லை; ஆகவே காந்திஜி சொன்ன கிராம சுயராஜ்யத் திட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்படவேண்டும்; கிராமங்களில் உள்ளவர்கள் அவர்களுக்குத் தேவையானவைகளை அவர்களே உற்பத்தி செய்துகொண்டு சுயேச்சையாக இயங்க வேண்டும். இந்தக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டுதான் பூமிதான யக்ஞம் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. கிராம மக்கள் எல்லோருக்கும் நிலம் கிடைக்கச் செய்வதோடுமட்டும் நிற்காமல், கிராம மக்கள் அவர்களுக்குத் தேவையான எல்லாவற்றையும் அவர்களே உற்பத்தி செய்து கொள்ளும்படி செய்வதற்கும் வகை செய்ய வேண்டும் என்பதை அடிப்படையாகக் கொண்டது தான் பூமிதான யக்ஞம் என்பதை யாரும் மறுக்கமுடியாது.

பூமிதான யக்ஞத்தை நடத்திக்கொண்டிருக்கும் விநோபாஜி, பூமியைக் கோரிக்கொண்டுமட்டும் இருக்கிறார் என்று சொல்லமுடியாது. தேசத்திலுள்ள வேறு யார் மனதிலும் தோன்றாத புரட்சிகரமான கருத்துக்களை விநோபாஜி மக்களிடையே பரப்பி வருகிறார். இந்த நாட்டில் படித்தவர்கள் ஒரு பகுதியினராகவும் படிக்காதவர்கள் ஒரு பகுதியினராகவும் இருக்கிறார்கள். படித்தவர்களுக்கு இந்த சமுதாயத்தில் அதிக உரிமை—சௌகரியங்களை அனுபவிக்கும் உரிமை—உண்டு என்ற மனப்பான்மை நாட்டில் வளருகிறதே தவிர, படிக்காத ஏழைப் பாட்டாளிகளுக்கும் அந்த உரிமை இருப்பதை யாரும் ஏற்றுக்கொள்வது கிடையாது. இன்று,

15th February 1958] [Sri A. R. Marimuthu]

சமூகத்தில் வக்கீல்கள், டாக்டர்கள் போன்றவர்களும், நல்ல தொழில்களில் இருக்கும் மற்ற படித்தவர்களும், தாங்களாக தனிப்பட்ட முறையில் வளர்ச்சியடைந்து அந்த நிலைக்கு வந்திருப்பதாகக் கருதுகிறார்களே தவிர, அவர்கள் அந்த நிலைக்கு வந்ததற்குக் காரணமாக இருந்தது சமூகத்தில் இருந்துவந்த சூழ்நிலை என்று கருதவில்லை. சமூகத்தில் தகுந்த சூழ்நிலை இருந்திராவிட்டால் அவர்கள் வக்கீல்களாகவோ டாக்டர்களாகவோ வந்திருக்க முடியாது. சமூகத்தின் ஒத்துழைப்பின் பேரில்தான் ஒருவன் டாக்டராகவோ வக்கீலாகவோ வரமுடிகிறது. ஒருவன் தானாகவே வளர்ச்சியடைந்துவிட முடியாது. சமூகத்திலுள்ள பல பெரியவர்களும் அறிவாளிகளும் சமூகத்தின் ஒத்துழைப்பின் பேரில் தான் அவர்களுடைய அறிவைப் பெருக்கிக்கொண்டிருந்திருக்கிறார்களே தவிர, அவர்கள் தனி மனிதர்களாக அவர்களுடைய அறிவைப் பெருக்கிக்கொண்டுவிடவில்லை. தனி மனிதர்களாக இருந்திருந்தால் அவர்கள் சமூகத்தில் பழகுவதற்கே லாயக்கில்லாதவர்களாகக்கூட ஆகியிருக்கக்கூடும். சமூகத்தின் ஒத்துழைப்பின் பேரில் தான், சமூகத்தோடு சேர்ந்திருப்பதால்தான், ஒருவன் ஒரு பாஷையைப் பேசுவதற்கே முடிகிறது—பாஷையைக் கற்றுக்கொள்ள முடிகிறது. தனி மனிதன் வளர்ச்சியடைய முடியாது. ஆகவே சமூகத்திலுள்ள எல்லா அறிவாளிகளும், மேதைகளும் சமூகத்திற்குக் கடமைப்பட்டவர்கள். சமூகத்தில் இருக்க வேண்டியதைவிட, சமூகத்திலிருந்து தாங்கள் அதிகமாக ஒன்றும் எடுத்துக்கொள்வதற்கு உரிமை இல்லை என்ற எண்ணம் சமூகத்தில் எல்லா மக்களுக்கும் ஏற்பட வேண்டும் என்ற புரட்சிகரமான கருத்தைத் தான் விநோபாஜி தெரிவித்துவருகிறார்.

படித்தவர்கள், அறிவாளிகள், மற்றெல்லோரும் உணவில்லாமல் வாழமுடியாது. எல்லோரும் வாழ வகைசெய்பவர்கள் உழவர்கள் தான். ஆகவே உழவர்கள் மிகவும் மதிப்பிற்குரியவர்கள். உழவனையும் உழைப்பையும் ஜாதி வித்தியாசமோ, மத வித்தியாசமோ, உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற வித்தியாசமோ, படித்தவன் படிக்காதவன் என்ற வித்தியாசமோ, மற்ற எந்த வித்தியாசமோ பாராட்டாமல் மதிக்க வேண்டும் என்று விநோபாஜி ஒப்புக்கொள்கிறார், இதை எல்லோரும் ஒப்புக்கொள்ளவேண்டும் என்பதை யாரும் மறுக்க முடியாது, இதற்கு யாரும் மறுப்பு சொல்லமுடியாது என்று நான் கருதுகிறேன். ஆகவே, அந்த உண்மையான லட்சியத்தை அடிப்படையாகக் கொண்டு இன்றைக்கு ஒரு உண்மையான சோஷலிஸ கிராமத்தை மாதிரியாக அமைத்து காண்பிக்க வேண்டியது சமூகத்தில் இருக்கக்கூடிய எல்லோருடைய பொறுப்பும் கடமையுமாகும். நாம் எல்லோரும் சோஷலிஸத்தை நோக்கிச் செல்கிறோம். இந்த சோஷலிஸம் எங்கு இருக்கிறது என்று கேட்டால் கிராமதானமாக கொடுக்கப்பட்டிருக்கும் கிராமங்களில் உள்ள மக்கள் தங்களுக்கு என்று சொந்தமாக எதையும் வைத்துக் கொள்ளாமல் எல்லாவற்றையும் சமுதாயத்திற்கு கொடுத்துவிட்ட அப்படிப்பட்ட கிராமங்களில்தான் பூரண சோஷலிஸம் இருக்கிறது. உண்மையான சோஷியலிஸ கிராமங்களாக அவைகளை ஆக்குவதற்கு வேண்டிய எல்லா உதவிகளையும், அதற்கு வேண்டிய எல்லா வசதிகளையும் அரசாங்கம் செய்துகொடுக்கவேண்டும். அவைகளுக்கு என்னென்ன தேவையோ அவைகளையெல்லாம் அரசாங்கம் செய்து கொடுக்கவேண்டும். கிராமதானமாக கொடுக்கப்பட்ட கிராமங்களின் சுற்றுப்புறங்களில் உள்ளவர்களால் கிராமதானமாக கொடுக்கப்பட்ட கிராமங்களில் உள்ள மக்கள் பல விதங்களிலும் பாதிக்கப்படுகிறார்கள். ஆகவே, அத்தகைய ஒரு உணர்ச்சி ஏற்படாமல், கிராமதான மக்கள் ஒரு விதத்திலும் பாதிக்கப்படாமல், அவர்களுக்கு என்னென்ன தேவையோ அவைகளை அரசாங்கம் செய்து கொடுக்கவேண்டும் என்று நான் இச்சந்தர்ப்பத்தில் கேட்டுக்கொள்கிறேன். அப்படி, உண்மை சோஷலிஸ கிராமம் எப்படியிருக்கவேண்டும் என்று எடுத்துக் காட்டக் கூடிய ஒரு சூழ்நிலையை ஏற்படுத்த சர்க்கார் தன் உதவி மூலம் கிராமதானமாக அளிக்கப்பட்ட கிராமங்களில் உள்ள மக்களுக்கு வேண்டியதைச் செய்ய வேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறேன். நமது பொருளாதார வசதியை மட்டும் நாம் பார்க்காமல் அந்த கிராமங்களை உண்மையான சோஷலிஸ கிராமமாக ஆக்குவதற்கு வேண்டியதைச் செய்யவேண்டும்.

முன்பு மகாத்மா காந்தியடிகள் கூறினார்கள், இப்பொழுது விநோபாஜி அவர்கள் கூறிக்கொண்டு வருகிறார்கள். கிராமமக்கள் எதற்கும் பிறரை எதிர்பார்க்கும் நிலைமை இருக்கக்கூடாது என்றும் கூறினார்கள். ஆகவே, கைத்தொழில் வளர்ச்சி போன்ற எல்லாவற்றையும் அங்கு செய்து கொடுத்து, அவர்களுக்கு வேண்டிய எல்லாத் தேவைகளையும் அளிப்பதோடு கூட அரசாங்கமே இல்லாத ஒரு சமுதாயம் வேண்டுமென்றுதான் விநோபா பாவே அவர்கள் கூறுகிறார்கள். அன்று மஹாத்மா காந்தியடிகள் ராமராஜ்யம் வேண்டுமென்று கூறினார்கள். இதேபோல், விநோபா அரசாங்கமே இல்லாத ஒரு சமுதாயம் வேண்டுமென்று கூறுகிறார்கள். நாம் எதற்கு எடுத்தாலும் மேல் இடத்தில் கேட்கவேண்டும் என்ற நிலை மாறி, தங்கள் இஷ்டம்போல் நல்ல காரியங்களை செய்யும் ஒரு நிலையில் அக்கிராமங்கள் இருக்க வேண்டும். அரசாங்கம் எதற்கு எடுத்தாலும் சட்டத்தின் மூலம் அவர்களைக் கட்டுப்படுத்தாமல் அவர்களுக்கு வேண்டிய உதவி செய்து அவர்கள் சுதந்திரமாக வாழ்வதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுத்து அவைகளை சுயராஜ்ய கிராமங்களாக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு எனது உரையை முடித்து கொள்கிறேன்.

10-32 a.m. **SRI W. P. A. R. CHANDRASEKHARAN:** தலைவர் அவர்களே, மனிதர்களிடையே தற்சமயம் வாழ்ந்துவரும் மிகப் பெரிய தலைவரான ஆச்சாரிய விநோபா பாவே அவர்களின் பூமிதான இயக்கத்தை அனுசரித்து இப்பூமிதான சட்டத்தை அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருப்பதை ஆதரித்தும், வரவேற்றும் நான் ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். தெலுங்கானாவில் ராமச்சந்திர ரெட்டியார் அவர்கள் 100 ஏக்கர் நிலம் தானமாக செய்ததின் மூலம் ஆரம்பித்த பூமிதான இயக்கமானது மிகப் பெரிய அளவில் வளர்ந்து உலகத்தில் உள்ள அரசியல் வாதிகளையும், நிபுணர்களையும் கவர்ந்திருக்கிறது என்று சொன்னால் அது மிகையாகாது. அது மாத்திரமல்ல. சாதாரணமாக ஏன் இது நகரங்களில் ஆரம்பிக்கப் படவில்லை, தொழில்கள், அதாவது இன்டஸ்ட்ரீஸ் உள்ள இடங்களில் இது ஏன் ஆரம்பிக்கப்படவில்லை என்று கேட்கப்படுகிறது. நம்தேசத்தில் உள்ள விவசாயிகள், ஏதாவது தான் உழைக்கும் ஒரு மணி நேரத்திற்கு இவ்வளவு ஊதியம் அடைகிறோம் என்ற நிலையில்தான் இருக்கிறார்கள் என்று கூறுவது பொருத்தமாகும். அவ் விவசாய மக்களை உய்விப்பதற்காகத்தான் கிராம தானமாக பூமிதானம் வளர்ச்சி பெற்றது. வேறு தொழில்கள் உள்ள இடங்களில் ஆரம்பிப்பதைவிட, இந்த பூமிதானத்தை முதன் முதலாக கிராமங்களில்தான் ஆரம்பிக்க வேண்டும். முழுக்க முழுக்க விவசாய மக்களைக் கொண்ட கிராமங்களாகப் பார்த்து ஆரம்பியுங்கள் என்று விநோபா பாவே அவர்கள் கூறினார்கள். அது மாத்திரமல்ல. அந்த பூமிதானம் இயங்க ஆரம்பிப்பதற்கு, வெளியாரின் உதவி பொதுமக்களிடையே இருந்தும் வரலாம். சர்க்காரிடையே இருந்தும் வரலாம். பொதுமக்களிடையே இருந்துவரும் உதவியை பாவே அவர்கள் சம்பத் தானம் என்று குறிப்பிடுகிறார்கள். இந்த சம்பத் தான விஷயத்தில் எனக்குத் தெரியும், வியாபாரிகள் பாவே அவர்களை அணுகி, எங்களுக்கு இன்கம் டாக்ஸ் ரிபேட் நீங்கள் வாங்கிக் கொடுத்தால் எவ்வளவு வேண்டுமானாலும் நாங்கள் சம்பத் தானமாக தாராளமாகக் கொடுக்க முடியும் என்று கூறியபோது அவர்கள் குறிப்பிட்டார்கள், "அது இன்கம் டாக்ஸ் டிபார்ட்மெண்டின் பணம். அது உங்களுடையதல்ல. அதை நீங்கள் கொடுப்பது என்பது சரியல்ல. அதற்கு ஒரு கட்டுக்கோப்பு இருக்கிறது. அந்த டிபார்ட்மெண்டுக்கு என்று ஒரு கடமை இருக்கிறது. அதை நிறைவேற்ற இன்கம் டாக்ஸ் டிபார்ட்மெண்டார் அப்பணத்தை வசூலித்து வினியோகம் செய்து வருகிறார்கள். அதில் நீங்கள் குறுக்கிட்டு, நீங்கள் சம்பத் தானம் கொடுத்துவிட்ட பெருமையை அடைய முடியாது" என்று. அது, பொருத்தமானதல்ல என்றும் குறிப்பிட்டார்கள். அதாவது, அவர்களுடைய வாழ்க்கை சௌகரியங்களுக்குமேல் பொருளீட்டுபவர்கள் தங்கள் வருவாயிலிருந்து கொடுப்பதுதான் சம்பத் தானம் என்று அவர்கள் குறிப்பிட்டார்கள். அதேபோல், ஒரு முனிஸிபாலிட்டியார் அவரை அணுகி, நாங்கள் முனிசிபாலிட்டி வருமானத்திலிருந்து உங்களுக்கு சம்பத் தானமாக கொடுக்கிறோம் என்று பாவே அவர்களிடம் சொன்னார்கள்; அதற்கு

அவர்கள் நீங்கள் சாக்கடைகளை சுத்தம் செய்து, தெருக்களை சுத்தம் செய்து மக்களை நோய்நொடியிலிருந்து தடுப்பதற்கு என்று அமைக்கப் பட்டிருக்கும் வருவாயை நீங்கள் சம்பத் தானமாக கொடுத்து விட்டுப் போய் விட முடியாது என்று சொன்னார்கள். ஆகவே, இப்பொழுது நிலவிவரும் மனித சமுதாய அமைப்பின் கட்டுக் கோப்பை குலைக்கா மலும் அதில் தலையிடாமலும் மக்களின் மனமாற்றத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டு சமுதாய முன்னேற்றம் காண்பதுவே பாவே அவர்கள் இயக்கத்தின் நோக்கம். பூமிதானம் கிராம தானமாக வளர்ந் தது, பூமி தானம் பெரிய அளவில் வளர்ந்துவிட்டதால், அதை வினி யோகித்து நிர்வகிப்பதில் எழுந்த பிரச்னைதான் இந்த கிராம தானமாக உருவாயிற்று. கிராம தானம் உருவாகி, மதுரை மாவட்டத்தில் பெரிய அளவிற்கு யாரும் எதிர்பார்க்காத அளவு அது வளர்ச்சி பெற்றது. இப் பொழுதும், திருமங்கலம், நிலக்கோட்டை தாலுகாக்களில் பல கிராமங்கள், அதாவது மக்கள் தங்கள் பரிபூர்ண ஒத்துழைப்புடன் கொடுக்கப்பட்ட கிராமங்கள்தான், கிராம தானமாக அடையப் பெற்றிருக்கிறது. இந்நிலை யில் இந்தச் சட்டம் கொண்டுவரும்போது, இந்த மனமாற்றம் அதன் அடிப் படையாக இருக்கவேண்டும். அதன் மூலம் இந்தச் சட்டம் பயன்பட வேண்டும் என்ற கருத்து நிலவ வேண்டுமென்று நான் பணிவன்புடன் கேட்டுக்கொள்ளுகிறேன். எல்லாச் சட்டங்களுக்கும் இல்லாத ஒரு அந்தஸ்தும், தனி இடமும் சர்க்காரிடையேயும், இம்மன்றத்திலும், இச்சட்டத்திற்கு இருக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஏனெனில் நிலத்தைப் பூரா வும் கொடுத்துவிடுங்கள் என்று சட்டத்தின் மூலம் ஒரே வரியில் சொல்லி விடலாம். சட்டத்தின் மூலம் கையாளும்போது அதில் இருந்து நழுவிக் கொள்ள இடம் இருக்கிறது. ஆனால் மக்களின் மனதை மாற்றி அவர்க ளிடம் இருந்து நிலத்தை அடையும்போது நழுவுவது என்பதிலிருந்து விடுபடலாம். ஆகவே, இச்சட்டம் மனமாற்றத்தின் அடிப்படையில் நிறுவப் படவேண்டும் என்று சொல்லிக்கொண்டு நமது சர்க்கார் பூமிதான நிலங் களுக்காக 20 லட்சம் ரூபாய் கடன் வினியோகம் செய்ய ஒதுக்கியதற்காக நான் சர்க்காரைப் பாராட்டுகிறேன்.

**(Mr. Speaker in the Chair.)**

அப்படி ஒதுக்கிய தொகையில் பெரிய அளவு வினியோகிக்கப்படவில்லை. அதில் குறைபாடு இருக்கிறது என்று கூறப்பட்டது. அதற்குக் காரணம் நமது ரெவின்யூ டிபார்ட்மெண்டிலுள்ள நிலங்களின் உரிமைப்பாடு அமைக் கப்பட்டிருக்கும் விதம்தான். அதாவது, ஒருவர் நிலத்தை அனுபவித்துக் கொண்டிருப்பார். ஆனால் அது இன்னொருவர் பேரில் பட்டா இருக்கும். பட்டா கூட கூட்டுப் பட்டாவாக இருக்கும். கூட்டாக கிஸ்தி செலுத்துவதும் உண்டு. அம்மாதிரியான தடைபாடுகள் இருப்பதினால்தான் இவ் விதம் வினியோகம் செய்யப்படும் நிலத்தை மக்களால் அடைய முடியா மல் போய்விடுகிறதே தவிர, வேறு ஒன்றுமில்லை. இதற்கெல்லாம் சரியான சூழ்நிலை நம்மிடம் இருக்கிறது. அதாவது இம்மாதிரிப்பட்ட நிலங்களைப் பட்டா மாறுதல் செய்யப்படும்பொழுது சாதாரணமாகப் பாராமல் இம் மாதிரிப்பட்ட பூதான விண்ணப்பங்களுக்கு முதலிடம் கொடுக்கப்பட வேண்டுமென்று சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்குத் தெரிவிக்க வேண்டு மென்று அரசாங்கத்தினிடம் கேட்டுக்கொள்ளுகிறேன். மேலும் இந்த சர்க்கார் தங்களுடைய சலுகை அல்லது அந்தஸ்து ஆதரவை காட்டும் விஷயத்தில் கிராம தானங்கள் பெரிய அளவில் ஏற்பட்டிருக்கும் இடங் களில் அதிகமாக பிளாக் டெவலப்மெண்ட், கம்யூனிட்டி பிராஜக்ட் இவை போன்றவைகளுக்கு முதலிடம் கொடுத்து அதற்கு ஆதரவு கொடுக்க வேண்டுமென்று குறிப்பிட விரும்புகிறேன். எதற்காகவென்றால், சிலர் சொல்லுகிறார்கள், சர்க்கார் பூமிதான இயக்கத்தால் பிளாக் டெவலப் மெண்ட் திட்டங்களை இண்ட்யூஸ் செய்வதற்குக் கொண்டுவரப்படுகிறது என் றுள்ள கருத்து கூறப்படுகிறது. எந்த நிலையிலும் பழி அல்லது தவறு தல்களைச் சொல்லுவது சுலபம். என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொண்டிருக்கலாம். ஆகவே சர்க்கார் தங்களது ஆதரவைக் காட்டுகிறது என்ற முறையில் இதற்கு முதலிடம் கொடுத்து ஆதரிக்க வேண்டுமென்று

கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த நிலையில் இன்னொரு விஷயத்தைக் குறிப்பிட விரும்புகிறேன் அதாவது நிலம் குறைவாக உள்ளவர்களிடமிருந்து நிலம் வாங்கப்படுகிறது. ஆனால் நிலம் அதிகமாக உள்ளவர்களிடமிருந்து சரியாக நிலம் வாங்கப்படவில்லை என்று பூமிதான இயக்கத்தைப்பற்றி குறை கூறப்படுகிறது. இதற்கு பாவே அவர்கள் வகுத்த திட்டத்தில் பூதானம், சம்பத் தானம், சிரம தானம், புத்தி தானம் என்று ஏற்படுத்தியிருப்பது போல் வாபஸ் தானம் என்றும் ஒரு முறை ஏற்படுத்தியிருக்கிறார்கள். யாராவது மனமாற்றம் அடைந்து நிலத்தைக் கொடுப்பார்கள். குறைவாக நிலம் வைத்திருப்பவர்கள் கஷ்டப்பட்டுக்கொண்டிருப்பவர்கள் நிலத்தை தானம் கொடுத்தால், "நீ உன்னுடைய தகுதிக்குக் கூடுதலாகக் கொடுத்துவிட்டாய், ஆகையால் நீ திரும்ப நிலத்தை எடுத்துகொள்ளலாம்" என்று கொடுப்பதற்கு வாபஸ் தானம் என்று ஒரு திட்டம் இருக்கின்றது. அங்கே அது மாதிரி அதிகமாக நிலம் உள்ளவர்கள் சரியான முறையில் கொடுக்காமல் குறைவாகக் கொடுத்தால் அவர்களுக்கும் வாபஸ் தானம் பயன்படுகிறது. அதாவது "நீங்கள் கொடுக்க வேண்டிய அளவு கொடுக்கவில்லை, ஆகவே அதை வாபஸ் பெற்றுக்கொண்டு நீங்கள் மனமாற்றம் அடையும் வரையினும் நிலத்தை வைத்துக்கொள்ளுங்கள்" என்று அவர்களுக்கு வாபஸ் தானம் செய்யப்படுகின்றது. இம்மாதிரியான பூமிதான இயக்கத்தில் எந்த விதமான குறைபாடும் வராது. அவ்விதம் ஏதாவது வந்தாலும் இந்த இயக்கம் மனமாற்றத்தின் அடிப்படையில் வேலை செய்துவருவதால், இது நல்ல ரீதியில் நிலவும் என்று கூறிக்கொண்டு இதில் எல்லாக் கட்சிகளும் ஒன்று சேர்ந்து வேலை செய்வதற்கு வேண்டிய ஒரு இயக்கம் என்பதை சொல்லிக்கொள்ளுகிறேன். இன்றைக்கு சர்க்காரை விட்டுவிட்டால் காங்கிரஸ் கட்சி இருக்கிறது, இன்னும் பிரஜா சோஷலிஸ்டு கட்சி இருக்கிறது. டி.எம்.கே. இருக்கிறது. மற்றும் கம்யூனிஸ்டு கட்சி இருக்கிறது. இவைகள் எல்லாம் ஒருமுகமாகச் சேர்ந்து இதில் உழைப்பதற்கு இது ஒரு சரியான இயக்கம் என்பதைச் சொல்லிக்கொள்ளுகிறேன். இதில் இப்போது எனக்குத் தெரிந்த அளவில் காங்கிரஸ் தன்னால் இயன்ற அளவு என்னவெல்லாம் செய்யமுடியுமோ அவைகளை எல்லாம் செய்து வந்திருக்கின்றது. என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன். இதில் எல்லோரும் கட்சி சார்பற்ற முறையில் வேலை செய்ய வேண்டும். சமீபத்தில் கூட மறைமுகமாக வத்தலகுண்டு பிர்க்காவில் ஒன்று சேர்ந்து சர்வோதய தினத்தைக் கொண்டாடினார்கள். இம்மாதிரியான ஒரு மனமாற்றத்தை ஏற்படுத்துவதற்காகத்தான் மனிதர்களுள் தெய்வமாக நம்மிடையே வாழ்ந்து மறைந்த மகாத்மா காந்தியடிகள் வேலை செய்தார். அவர் விட்டுச் சென்ற வேலையை அவர்களின் வாரிசான வினோபா பாவே அவர்கள் நிறைவேற்றி வருகிறார்கள். அதற்குச் சர்க்கார் தங்களுடைய முழு ஆதரவையும் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன். வணக்கம்.

10-45 a.m. **SRI M. RAMACHANDRA REDDI**: மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, இன்று இந்த சபையில் வந்திருக்கும் பூதான யக்ஞ மசோதாவைப் பற்றியும் அதனுடைய அம்சங்களைப் பற்றியும் ஆதரித்து இரண்டொரு வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். இன்று உலகம் போய்க்கொண்டிருக்கிற நிலையில், அமைதியை நிலைநாட்டிக்கொண்டிருக்கின்ற இந்த சந்தர்ப்பத்தில், அதிகமான சீர்திருத்தங்களைச் செய்யவேண்டும் என்று எண்ணிக்கொண்டிருக்கின்ற இந்த சந்தர்ப்பத்தில், நமது அரசாங்கம் இப்போது புனிதமான ஒரு மசோதாவைத் தயாரித்து அதைச் செயலாற்றுவதற்குக் கொண்டு வந்திருக்கிறதைப் பற்றி நான் பெருமிதம் அடைகிறேன். இன்று நாட்டில் வந்துள்ள சீர்திருத்தங்களில் மிக முக்கியமாக விளங்குகிறது இந்த பூதான யக்ஞ மசோதா ஆகவே இதை ஒரு புனிதமான சட்டம் என்று சொல்லலாம். இதை நாம் பேணி வளர்க்க வேண்டும். இந்தச் சட்டம் இல்லாமலும் இதிலுள்ள தூய்மையான கருத்துக்களை நாம் நாட்டில் வளர்க்கலாம். ஆனால் அதைப் பாதுகாப்பதற்கு, வளர்ச்சி பெறச் செய்வதற்கு, இந்தச் சட்டம் மிக அவசியமாக வேண்டியிருக்கிறது. இதிலுள்ள கருத்துக்களைத் தூண்டவேண்டிய அவசியமில்லை. அதற்காகத்தான் வினோபாஜி அவர்கள் நாட்டில் இருக்கின்ற சூழ்நிலை காரண

15th February 1958] [Sri M. Ramachandra Reddi]

மாகவும், உலகம் போகின்ற நிலைமையிலும், இப்போது ஏற்பட்டிருக்கின்ற புரட்சியின் காரணமாகவும் இவைகளை எந்த விதத்தில் தீர்க்க வேண்டுமென்று ஆலோசித்து இந்த பூதான இயக்கத்தை ஆரம்பித்தார்கள். இன்றைக்கு ஒருபுறம் நிலச்சுவான்தார்களும் இன்னும் பல கோடீச்வரர்களும், பணத்திற்கு இன்றைக்கு இருக்கின்ற மதிப்பின் காரணமாக, அதன் மேலிருக்கின்ற ஆசையில் ஊறிக்கிடக்கிறார்கள். அதில்தான் நம்முடைய வாழ்வு இருக்கின்றது என்று எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். அந்த வகையில் ஒரு சாரார் இருந்துவருகின்ற நிலைமையில், இன்னொரு சாரார்—நிலமற்றவர்கள்—பரம்பரையாகவே அவர்கள், உலகம் தோன்றிய நாள் முதற்கொண்டு ஆஸ்தியே இல்லாத நிலைமையில் இருக்கின்றவர்கள். இந்த நாட்டில் பெருந் தொகையாக இருந்துகொண்டிருக்கிறார்கள். இந்த இரு சாரார்களுக்கும் எப்போதுமே ஒரு போர் நடந்துகொண்டு வருகிறது. அது சாத்வீகப் போராக இருந்தாலும் சரி, அல்லது ஹிம்சைப் போராக இருந்தாலும் சரி ஏதோ ஒரு வகையில் இந்தப் போராட்டம் நடந்து கொண்டேவருகிறது. இந்த நிலையில் அறிவாளியாக விளங்கிய வினோபாஜி அவர்கள் இந்த தெய்வ பிறவிகளை எல்லாம், இந்த ஏழை மக்களை எல்லாம் ஒன்றாகச் சேர்த்துக்கொண்டு குடும்பங்களில் சண்டை இருக்கக்கூடாது என்கிற அடிப்படையில், நாட்டில் ஏற்றத் தாழ்வு இருக்கக்கூடாது என்கின்ற அடிப்படையில், இந்த பூதான இயக்கத்தை ஆரம்பித்தார்கள். அங்குதான் இருக்கிறது எல்லாம். அந்தச் சொத்துரிமையில் தான் சண்டை வருகிறது. இது பெரிய நிலச்சுவான்தார்களிடம் மாத்திரம் தான் என்பது இல்லை. ஒரு சிறு காணி வைத்திருக்கக் கூடியவர்கள் விஷயத்திலும் ஏற்படுகிறது. ஒவ்வொரு மிராசுதாரும் மனமாற்றம் அடைய வேண்டும். ஆகையால்தான் இன்றைய நிலையில் ஒருவரும் நிலம் இல்லாதவர்களாக இருக்கக்கூடாது என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். அது தான் அடிப்படை. அதைப் படிப்படியாக உணர்ந்து நிலத்திற்கு உரிமையாளர்களே இருக்கக்கூடாது என்பதுதான் சித்தாந்தம். உரிமையில்லாமல் போனால் யார் பண்படுத்துவது, யார் விளைவிப்பது, எப்படிப் பகிர்ந்து கொள்வது என்ற சந்தேகம் ஏற்படலாம். ஒரு கிராமத்தினுடைய நில விஸ்தீர்ணத்தைத் தெரிந்துகொண்டு, அதற்குத் தகுந்தாற்போல் மக்களை அங்கு நிர்ணயித்து, ஒரு சங்கத்தை அமைத்துக்கொண்டு அவர்கள் அதைப் பண்படுத்தி, விளைவு படுத்தி, வருகிற வருமானத்தைக்கொண்டு ஜீவிக்கவேண்டியது. அதைப் போல் ரொம்ப ஆசையை வைத்துக்கொண்டு வாழ்க்கைக்கு உணவுப் பொருள்களும், உடுக்க உடையும், போக போக்கியங்களையும் பெரிதாகக் கருதி, அடைய வேண்டிய லட்சியத்தை மறந்துவிடாமல், கல்வி வாயிலாக அறிவை அடைந்து, எம்பெருமான் திருவடியை அடைவதற்கு, கடவுளை அடைவதற்கு, ஆராய்ச்சி செய்ய முற்படவேண்டும். அறிவுடையவனும் இறக்கிறான். அறிவற்றவனும் இறக்கிறான். அறிவுடையவன் அறிவினைத் தெரிந்துகொள்கிறான். அறிவினைத் தெரிந்து பேச்சைக் குறைத்துக் கொள்கிறான். பேச்சைக் குறைத்து மௌனத்தைக் கொள்ளுகிறான். இப்படிப்பட்டவன் மனிதத் தன்மையிலே கடவுள் தன்மையை அடைகிறான். ஒவ்வொரு மனிதனும் இப்படி மாறவேண்டும். ஒவ்வொரு மனிதனும் நல்லவன்தான். ஆனால் சூழ்நிலை காரணமாக மிருகமாக மாறிவிடுகிறான். இது சூழ்நிலையைப் பொறுத்த விஷயமாக இருக்கிறது. இப்படியாக மனிதன் தன் மனிதத் தன்மையை மறக்கக்கூடாது. அப்படி மறப்பது ஒரு கொடிய செயல். இந்த முறையில் சிந்திக்க வேண்டும். அதே போல் கடவுள் தன்மையை அடைய சிந்திக்கவேண்டும். அதற்கான முயற்சியை எடுத்துக்கொள்ளவேண்டும். அப்போது அன்பு ஏற்படுகிறது. அன்பு உடையவன் எல்லாம் உடையவன் என்று சொல்வார்கள். உலகத்திலே மன்னருக்கு மதிப்புக் கிடையாது. மகரிஷிகளுக்குத்தான் மதிப்பு. அதிலும் நம் தமிழ் நாட்டில் மன்னருக்கு மதிப்பு கிடையாது. ஏன் இந்த மகரிஷிகளுக்கு இவ்வளவு மதிப்பு என்றால் அவர்களுக்கு எந்த விதமான பற்றுதலும் கிடையாது. போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து என்ற அடிப்படைத் தத்துவத்தைக் கொள்ள வேண்டும். இங்கே பலவிதமான சச்சரவுகள் இருக்கின்றன. சட்டசபையில் எத்தனையோ

மசோதாக்கள் வருகின்றன. பல விவாதங்கள் வருகின்றன. அதிருஷ்ட வசமாக இந்த பூதான மசோதாவில் எல்லோருடைய கருத்துக்களிலும் ஒற்றுமை இருக்கிறது. இதில் மாத்திரம் ஒற்றுமை இருந்தால் போதாது. அடிப்படையில் பல கட்சிகளின் மனம் மாற்றம் அடையவேண்டும். சிக்கல்கள் மறைய வேண்டும். குறிப்பிட்டவர்கள் இந்த நாட்டிலே வாழக் கூடாது என்பதெல்லாம் மறைந்து எல்லோரும் கூடி ஐக்கியமாக வாழ வேண்டும். ஒரு மொழி வாழக்கூடாது என்று எதிர்க்கக் கூடாது. இப்படி ஐக்கியமாகப் பல பேர்களும், பல கட்சிகளும், அன்பாக, பரஸ்பரம் அபிமானத்தோடு வாழவேண்டும். அதுதான் சர்வோதயத்தின் அடிப்படை.. அதுதான் வினோபாவின் தத்துவம். ஆக அப்படிப்பட்ட ஒரு மிக உன்னதமான கருத்தைக் கொண்ட அவர் இந்த நாட்டிலே கால் நடையாக விஜயம் செய்தார். கால் நடையாக இந்த நாட்டிலே யாத்திரை செய்தார். ஆயிரக் கணக்கான ஏக்கர் நிலம் பூமி தானமாகக் கிடைத்தது. அப்படி பூமிதானமாகக் கிடைத்த ஊர்களை அபிவிருத்தி செய்வதற்கு சர்க்கார் உதவி செய்ய வேண்டுமென்று எனக்கு முன் பேசிய மதிப்பிற்குரிய அங்கத்தினர்களெல்லாம் சொல்லியிருக்கிறார்கள். சர்க்கார் ஓரளவுக்கு அதற்கு உபகாரம் செய்ய முன்வந்தால் ஆட்சேபணையில்லை. சர்க்கார் செய்யும் உபகாரத்தை நம்பி கிராமதானம் உருவாக்கப்படவில்லை. இவ்வித அடிப்படையில் இந்த சமுதாயம் அமையவேண்டும். அதற்குத் தக்கபடி மக்களுடைய மனமாற்றம் ஏற்படவேண்டும். அங்குள்ளவர்கள் தங்கள் கையாலேயே, சர்க்காரை நம்பி இராமல், அபிவிருத்தி செய்வதற்கு முன் வரவேண்டும். அம்மாதிரியான ஒரு புதிய சூழ்நிலை ஏற்படவேண்டும். இந்த நிலையில் நிலச் சீர்திருத்தம் வருகிறது. அப்படிப்பட்ட பிரேரணை இருக்கும் சமயத்தில் இந்த பூமிதான மசோதா நிறைவேற்றப்பட்டு செயல்படப் போகிறது. நிலச் சீர்திருத்தம் வேண்டும் என்ற நிர்ப்பந்தம் இந்த மசோதாவினால் ஓரளவுக்கு மாற்றப்பட்டுவிடும். மனதில் மாற்றம் அடைந்தால் இந்தத் தகராறுகள் வராது. இப்போது நிலத்தில் உரிமையைப் பற்றிப் பேசப்படுகிறது. உரிமையைப்பற்றிய சச்சரவு ரொம்ப இருக்கிறது. நிலம் ஆண்டவனுடையது என்று வைத்துக்கொள்ளுவோம். நிலம் ஆண்டவன் கொடுத்தது. அது ஆண்டவன் பெயரில் இருந்தால் என்ன, அல்லது ஒரு தனி மனிதனின் பெயரில் இருந்தாலென்ன, பெயரை வைத்துக்கொண்டு உரிமை போய்விட்டது என்று எண்ணக்கூடாது. படிப்படியாக அதை மாற்றிவிடலாம். அதிலிருந்து வரக் கூடிய வருமானத்தை பிரதானமாகச் சீர்தூக்கிப் பார்க்கவேண்டும். அந்த வருமானத்தை நியாயமான முறையில், அன்னியோன்னியமான முறையில், பகிர்ந்து கொள்ளவேண்டும். இதைத் தான் நம் ஒப்பற்ற மாபெரும் தந்தை போதித்தார்கள். இதை நாம் தெளிவாக, நன்றாக, சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். தொழிலாளராக இருந்தாலும், மிராசுதார்களாக இருந்தாலும், மற்றவர்களாக இருந்தாலும், நல்ல முறையில் கூட்டுறவு மனப்பான்மையோடு உற்பத்தி செய்யவேண்டும் என்ற தத்துவத்தைத் தெரிந்துகொள்ளவேண்டும். அப்படி உற்பத்தியாவதை சரியானபடி, சுமுகமாக வினியோகிக்கப்படவேண்டும். நிர்ப்பந்த முறையைப் பிரயோகித்து, கிளர்ச்சியை உண்டாக்கி, அறுவடையைப் பாதித்து, பொருள் உற்பத்தியைக் குறைக்கக்கூடாது. அம்மாதிரி நிர்ப்பந்தங்களை நிலச் சீர்திருத்தம் என்கிற முறையிலே உண்டாக்கிவிடுகிறோம், நம்மை அறியாமலே. கொஞ்சம் கொஞ்சமாக ஒரு இடத்திலே ஆரம்பித்து, இந்த நிர்ப்பந்தம் இல்லாத இடங்களிலும் இந்த நிர்ப்பந்தம் வருகிறது. வினோபா அவர்கள் சொன்னபடி அடிப்படை மனமாற்றத்தை உண்டாக்கி நிலம் அவ்வளவும் அந்த ஊரில் வாழுகிற அத்தனை பேருக்கும் சொந்தம் என்று ஆக்கிவிட வேண்டும். அப்படி அமைத்து நன்றாக நாம் வாழ்ந்து நாம் மனிதத் தன்மையிலிருந்து தெய்வத் தன்மையை அடைய வேண்டும். தலைவர் வினோபாஜி இதைத்தான் நன்றாக, ஆணித்தரமாக எங்கும் சொல்லிக்கொண்டு போகிறார்கள். வகுப்பு வாதமும் அழிந்துவிட வேண்டும். ஒரு வகுப்பைப் பற்றிப் பேசுவது என்று இல்லாமல் எல்லோரும் ஆதரவுடன் வாழவேண்டும். அதற்கு எல்லாக் கட்சிகளும் பிரசாரம் செய்ய வேண்டும். அந்தப் பிரசங்கத்தில் பூதான இயக்கத்தை

15th February 1958] [Sri M. Ramachandra Reddi]

யும் பற்றி விளக்கமாக எடுத்துக் கூறினுல் நிச்சயமாக சுபிட்சத்தையும் மாற்றத்தையும் ஏற்படுத்திவிடலாம். அப்போதுதான் சோஷலிஸத் தன்மை வாய்ந்த ராஜ்யமாக அமையும். முக்கியமான இந்தக் கருத்தைச் சொல்லுகிற இடத்திலெல்லாம் குடும்பச் சண்டைகளேயும் மற்ற சண்டைகளை யும் ஒழிக்க முடியும். அதற்காக எல்லாக் கட்சிகளும் உழைக்க முன் வரவேண்டும்.

அடுத்தபடியாக, அவர்கள் அறிவு தானம் செய்ய வேண்டும் என்று சொல்லியிருக்கிருர்கள். கிராமத்திலே போதிய அறிவு இல்லாத காரணத் திஞலே அறிவுதானம் கொடுக்கவேண்டும். நம்முடைய அறிவை தானமாகக் கொடுத்தால் அறிவு வளரத்தான் செய்யுமே தவிர, குறையாது. அறிவு பெற்ற பெரியோர்கள் கிராமப்புறங்களில் தொடர்பு கொண்டு அறிவு தானம் செய்ய வேண்டும். உழைப்பு தானம், அறிவு தானம் முதலிய எல்லா விதமான தானங்களையும் செய்து நாம் சர்வோதய முறையிலே முன்னேற வேண்டுமென்று எல்லாம் வல்ல இறைவனை பிரார்த்தித்துக்கொண்டு, எனக்குப் பேசுவதற்கு சந்தர்ப்பம் அளித்த தலைவர் அவர்களுக்கு வந்த னம் தெரிவித்துக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்ளு கிறேன்.

* Sri P. S. ELLAPPAN : கனம் சபாநாயகர் அவர்களே, இன்றைய தினம் விஞேபாஜி அவர்களின் புனிதமான சேவையைப் பற்றி இங்குள்ள பெரியோர்கள் எல்லாம் வெகு அழகாகக் குறளிலிருந்தும், ராமயணத்தி லிருந்தும் பல நீதிகளை எடுத்துக் காட்டி பேசினுர்கள். இவ்வளவு நாட்களாகப் போராட்டங்களைப் பற்றிய பேச்சுக்களைக் கேட்டு காது புளித்துப் போயிற்று. இந்த நீதிகளை எல்லாம் இப்பொழுது கேட்கும்பொழுது அசெம்பிளிக்கே ஒரு நல்ல காலம் வந்தது போல் இருக்கிறது. 11 a.m.

இதைக் கேட்டு நான் சொல்ல முடியாத சந்தோஷத்தை அடைகிறேன். பதி னைந்து நாட்கள் நான் மதுராந்தகம் தாலூகாவில் விஞேபாஜி அவர் களுடன் இருந்தேன். அவர் செங்கற்பட்டு ஜில்லாவைவிட்டு தென் ஆற்காடு ஜில்லா போகும்பொழுது "இந்த மகானின் உழைப்பினுல் தான் மக்கள் க்ஷேமத்தை அடைய வேண்டுமென்று" தெற்கு புறமாக வணங்கி பிரார்தனை செய்து கொண்டேன்.

காந்தி அடிகள் கிராம ராஜ்யம் நடைபெற வேண்டுமென்று சொல்லிக் கொண்டே இருந்து நம்மை விட்டுப்பிரிந்தார். அவர் பிரிந்த பின், தேசம் வேறு வகையிலே மாறிக்கொண்டு போகிறதே, தேசம் உருப்படியான முறை யிலே முன்னேறுவதற்கு வழி காட்ட வேண்டுமென்று நினைத்து விஞேபாஜி அவர்களை நம்முடைய மத்தியிலே அனுப்பியிருக்கிருர் போலும் ! மக்கள் முன்னேற்றிற்குப் பாடுபடுவதற்காக, கஷ்டப்பட்டு சம்பாதித்த தேசத்தை நல்ல பாதையில் கொண்டு போய்க் காப்பாற்றுவதற்காக நம்மிடையே விஞேபாஜி அவர்கள் வந்து $1\frac{1}{2}$ வருஷம் ஆகிறது. 'கலங்காத நெஞ்சுடைய ஞான தீரர்' என்று தாயுமான சுவாமி கூறியிருக்கிருர். அம்மாதிரி அவர் அப்பழுக்கு இல்லாத பரிசுத்தமான மகான். அந்த மகான் சொல் லக்கூடிய வார்த்தைகளில் நம்பிக்கை வைத்து நாம் எல்லோரும் அந்த முறையில் நடக்க வேண்டும். அப்படி நடந்தால் நம் நாடு உருப்படும். அவர் ஒவ்வொரு இடத்திலும் பிரசங்கம் செய்யும் பொழுது அங்கே உட் கார்ந்து அந்தப் பிரசங்கத்தைக் கேட்டுக்கொண்டிருக்கும் மிராசுதார் களும், பாமர மக்களும், தன்னை அறியாமல் மெய்மறந்து தங்கள் சொத் துக்களையெல்லாம் தானம் செய்துவிடலாமா என்று நினைக்கிருர்கள். சிலர் நம் பையன் என்ன சொல்லுவானே, என்று முடிந்தவரையில் கொஞ்சம் தானம் கொடுக்கலாம் என்று நினைக்கிருர்கள். சில பேர்கள் கொஞ்சம் நஞ்சையையும் மலைப்பக்கமாயுள்ள நிலத்தையும் தானம் கொடுக்கிருர்கள். நானும் கூட தானம் கொடுத்தேன். இம்மாதிரி பூதான இயக்கம் நடந்துகொண்டு வருகிறது. கிராம ஜனங்கள் தற்பொழுது "ஒரு சாமியார் வந்து நிலங்களை யெல்லாம் வாங்கிக்கொண்டார்களே ? அவைகளை தருமம் செய்வதாகச் சொன்னுர்களே. அவர் போய் $1\frac{1}{2}$ வருஷம் ஆகிவிட்டதே ? அந்த நிலங்கள் என்ன ஆயிற்று ? எப்பொழுது கிடைக்கும்

யாரைக் கேட்கலாம்?" என்று என்னிடம் கேட்கிறார்கள் நான் சொன்னேன், "இப்பொழுதுதான் காடு, கரம்பு நிலங்களையெல்லாம் சர்வே செய்கிறார்கள். இந்த தர்ம சொத்துக்களையெல்லாம் யாரிடம் ஒப்படைத்திருக்கிறார்கள். அதை யார், எப்பொழுது கொடுக்கப் போகிறார்கள் என்ற விஷயம் தெரியவில்லை. கொஞ்சம் பொறுத்துக்கொள்ளுங்கள். இவ்வளவு நாளாக பொறுத்துக்கொள்ள வில்லையா ?" என்று. சர்க்கார் நிலங்களைத்தான் கொடுக்க வில்லை யென்றால், தர்ம நிலத்தையாவது சீக்கிரமாக கொடுக்கக்கூடாதா ? சர்க்காரைக் கேட்டால் செட்டில்மெண்டு, சர்வே ஆகட்டும், பார்க்கலாம், பார்க்கலாம் என்று சொல்லுகிறார்கள். சர்வே செய்வது தூங்குகிறவர்களை தட்டி எழுப்புவது மாதிரிதான். எந்த இடத்தைக் கேட்டாலும், மலை என்று சொல்லுகிறார்கள். காடு என்று சொல்லுகிறார்கள் மாடுமேய்கிற நிலம் என்று சொல்லுகிறார்கள், இல்லாவிட்டால் ஏரி, சமுதாயம், களத்து மேடு மேயக் கால் என்றெல்லாம் சொல்லிவிடுகிறார்கள். யாருக்கு என்ன தான் கிடைக்கப் போகிறது என்ற விஷயமும் ஒன்றும் புரியவில்லை.

சபா நாயகர் அவர்கள் அனுமதி கொடுத்தால் நான் எங்கள் ஊரில் சர்வே நடந்தது பற்றி சொல்லுகிறேன். எங்கள் ஊருக்கு 5 மைலிலே சித்தூர் என்ற கிராமம் இருக்கிறது. அங்கே சர்வே செய்வதற்கு 3 குமாஸ்தாக்கள் வந்தார்கள். ஒரு சேரிக்கு பின் பக்கத்திலே 7 பிரும்மாண்டமான புளிய மரங்கள் இருந்தன. கிராமத்திற்கும் அதற்கும் 2 பர்லாங்குகள் இருந்தன. அந்த மரங்களையும் சேரிக்குள் தள்ளி கல்லைப் போட்டுவிட்டார்கள். அவர்கள் இரவில் மிராசுதார்கள் வீட்டில் சாப்பிட்டார்கள். மிராசுதார்கள் "என்ன இப்படி 7 மரங்களையும் உள்ளே தள்ளி கல்லைப் போட்டுவிட்டீர்களே ? நாங்கள் போய் அங்கே ஒரு புளியங்காய் கூட எடுக்க முடியாதே ?" என்று கேட்டார்கள். அதற்கு அந்த குமஸ்தாக்கள் "அந்த மரங்கள் சேரிக்கு சமீபத்தில் இருக்கின்றன. அவைகளை எப்படி கிராமத்துக்குச் சொந்தமாக்க முடியும். அது சரியல்ல. நியாயமும் அல்ல" என்று சொல்லிவிட்டார்கள். சேரிக்கு கீழ்ப்பக்கத்தில் ஒரு ஏக்கர் களம்பு இருந்தது. அதையும் சேரிக்குள் தள்ளி கல்லைப்போட்டுவிட்டார்கள். மறுபடியும் மிராசுதார் வீட்டிற்கு சாப்பிடப் போகும்போது "அந்த நிலத்தில் பாகப் பிரிவினை ஆகவில்லையே, அதையும் சேர்த்து சேரிக்குள்ளே தள்ளி கல்லைப் போட்டுவிட்டீர்களே ? எப்பொழுதும்போல் சாக்கடைக்கு மத்தியில் கல்லை போடக் கூடாதா ? இல்லாவிட்டால் ஹரிஜனங்கள் தொந்தரவு கொடுப்பார்களே ?" என்று கேட்டார். மறுநாள் அளக்கும்பொழுது சங்கிலியைப் பிடித்தார்கள். கிருஷ்ணன் என்ற ஹரிஜன்தான் சங்கிலியைப் பிடித்தான். சாக்கடைத் தண்ணீரில் குச்சியை நட்டார். "என்ன ? இப்படி செய்கிறீர்களே" என்று கேட்டதற்கு, அந்த குமஸ்தா 111 என்று சொன்னாராம். "111 என்றால் என்ன" என்று கேட்டதற்கு 'நாமம்' என்று சொன்னாராம். "எங்களுக்குத் தெரியாது. நாங்கள் போட்டுவிட்டு போகிறோம். வேணுமென்றால் பின்னால் அதிகாரியிடம் சொல்லி நீங்கள் ஏற்பாடு செய்துகொள்ளுங்கள்" என்று சொல்லி ஒரு ஏக்கர் அந்தப் புறம் தள்ளி குச்சியை நட்டுவிட்டார். ராவுக்கு ராவே செய்யூர் ஹாஸ்டலில் என்னிடம் வந்து ஜனங்கள் இதைச் சொன்னார்கள். நான் இதைப் பற்றி எஸ்டேட் மானேஜருக்கு எழுதி அனுப்பினேன். இந்த மாதிரி முறையில் சர்வே நடத்திக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே, இந்த சர்வே, செட்டில்மெண்டு இவைகளையெல்லாம் சர்க்கார் நல்ல விதமாக நியாயமான முறையில் செய்வதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். ஏதோ சர்க்காருக்கு நான் தொந்தரவு கொடுப்பதாக எண்ணக்கூடாது. இரண்டாவது செட்டில்மெண்டு முடிகிறது. அது நியாயமான முறையிலே பொதுமக்கள் மதிக்கும்படி நடப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

வினோபாஜி அவர்கள் சொல்லுகிறபடி கிராமராஜ்ய அடிப்படையிலே நடந்துகொண்டால் இங்கு ஒரு கட்சி கூட இருக்க முடியாது. சர்வமும் சிவம். ஒரு அங்கத்தினர் ஓம் என்ற தத்துவதைப் பற்றி சொன்னார்கள் சொன்னால் போதுமா, செய்தால் தீருமா ? கொஞ்ச நாட்களில் எல்லாம்

ஒழுங்காக நடக்கும், மகாத்மாஜி சொன்ன முறையில் நடந்துகொண்டால், வினோபாஜி அவர்கள் சொல்லுவதை எல்லா கட்சிகளும்—என்னையும் ஒரு கட்சியினராக எண்ணிக்கொள்ளுங்கள்—பின்பற்றி நடந்தால், எல்லாம் வெகு அழகாக நடக்கும். நம்நாடும் மக்களும் சுபிட்ச பாதையில் முன்னேறுவார்கள். அந்த மகான்கள் கஷ்டப்பட்டு, ரத்தம் சிந்தி, தியாகம் செய்து தேசத்திற்காக உழைக்கிறார்கள். எல்லோரும் இன்புற்றிருப்பது என் இச்சை பராபரமே என்று தாயுமான சுவாமி சொன்னதுபோல எல்லோரும் வினோபாஜியை பின்பற்றி நடந்துகொள்ள வேண்டுமென்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

**SRI A. V. P. ASAITHAMBI :** ஆன் எ பாயிண்ட் ஆப் இன்பர்மேஷன், ஸார், கேள்வி நேரத்தின்பொழுது நியாயவிலைக் கடைகளை நீடிக்க வேண்டுமென்று கேட்டபொழுது, நியாயவிலைக் கடை முறை தர்மம் கொடுப்பது போன்றது, எந்தமாதிரியான தர்மத்தையும் ஏற்பது சுயமரியாதைக்கு விரோதம் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். பூதானம் ஒரு தர்மம் என்ற அடிப்படையிலே அதைப் பற்றி இங்கு விவாதம் நடப்பது சுயமரியாதைக்கு விரோதம் இல்லையா? அந்த விவாதத்தை அனுமதித்திருக்கிறீர்களே?

**MR. SPEAKER :** அமைச்சர்கள் அவர்கள் பதிலில் அதைப் பற்றி சொல்லுவார்கள்.

**SRI G. ANNAMALAI MUTHURAJA :** கனம் சபாநாயகர் அவர்களே, பூமிதான இயக்கத்தைப் பற்றிச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். பூமிதான இயக்கத்திற்கு நிலம் கொடுத்தவர்களைப் பற்றிச் சில அங்கத்தினர்கள் பேசினார்கள். அவரவர்களுக்கு உபயோகமில்லா நிலங்களை பூமிதான இயக்கத்திற்குக் கொடுத்திருக்கிறார்கள், அதனால் ஜனங்களுக்கு சௌகரியம் கிடையாது, என்றெல்லாம் சொல்லிக் குறை கூறினார்கள். சிலர் வாழ்த்தவும் செய்தார்கள். பூமிதானத்துக்கு நிலம் கொடுப்பதென்றால், தாராளமான மனது வேண்டும். நிலம் கொடுத்தவர்களைப்பற்றி உயர்வாகச் சொல்ல வேண்டுமே தவிர, குறைவாகச் சொல்லிக் கொண்டே இருந்தால் எந்த விதமான பிரயோஜனமும் ஏற்படாது. அவர்கள் எல்லாம் தானம் கொடுத்தவர்கள், அதனால் ஏழை விவசாயிகளுக்குச் சௌகரியம் ஏற்படுகிறது என்று நாம் நினைத்தால்தான் மேற்கொண்டு நிலம் கொடுப்பதற்கு ஏதுவாகயிருக்கும் என்று சொல்ல விரும்புகிறேன். அநேகம் பேர்கள், இன்னும் பெரிய நிலச்சுவான்தார்கள் எல்லாம் நிலம் கொடுக்காமல் இருக்கிறார்கள். அவர்களிடத்தில் போய், நேரிடையாகப் பேசி, நிலம் இல்லாத ஏழை விவசாயிகளுக்கு நிலம் கொடுக்கும்படியாக யோசனைகளைக் கூறி, அவர்களிடமிருந்து நிலங்களை வாங்கி, ஏழை விவசாயிகளுக்குச் கொடுப்பதற்கு உதவி செய்தால் மிகவும் நன்றாக இருக்கும். கொடுத்தவர்களைப் பற்றிக் குறை சொல்லிக் கொண்டிருந்தால் ஒன்றும் பயனில்லை. அதோடுகூட, ஒரு தர்மம் செய்ய வேண்டுமென்றால், நம்முடைய நிலைமைக்குத் தக்கவாறு செய்வதற்கு மனம் வேண்டும். நம்மிடத்தில் இருப்பதைக் கொடுக்காமல் அழுத்தமாக வைத்துக் கொண்டு, கொடுத்தவர்களைப் பற்றிக் குறை சொல்லிக் கொண்டு போனால் என்ன பலன் ஏற்படும் என்பதை யோசிக்கவேண்டும். 11-10 a.m.

தவிர, சில நிலங்களில் தகராறு ஏற்பட்டிருக்கின்றன. முசிரி தாலூகாவில் ஏற்பட்ட கிஸான் தகராரைப் பற்றி திரு. சன்னாசி அவர்கள் ஆத்திரமாகச் சொன்னார்கள். பின்னால் விசாரிக்கும் பொழுது, அங்கு நடந்ததெல்லாம் மிகவும் கடுமையான விஷயம் என்று தெரிய வந்தது. இந்தக் கூட்டத்தில் சொல்வதற்குக் கூட வெட்கக்கேடாக யிருக்கிறது. என்று கேள்விப்பட்டேன். இது சம்பந்தமாக, போலீஸ் அமைச்சர் அவர்கள் துரிதமாக நடவடிக்கை எடுத்துக் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, பூமி தான இயக்கத்தின் மூலமாக கொடுக்கப்பட்ட நிலங்களை முறைப்படுத்துவதற்காகவும், அபிவிருத்தி செய்வதற்காகவும் கொண்டுவரப்பட்ட மசோதாவை நான் ஆதரிக்கிறேன். எனக்கு முன் பேசிய பல அங்கத்தினர்கள் இந்தப் பிரச்னையை மன மாற்றத்தின் அடிப்படையிலே நோக்கவேண்டுமென்று சொன்னார்கள். ஆனால், எதிர்க் கட்சியிலே உள்ளவர்கள் நேற்றைய தினம் பேசினதற்கும், இன்றைய தினம் பேசியதற்கும் உள்ள வித்தியாசத்தைப் பார்த்தால், எவ்வளவு மனமாற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது. சமீபத்தில் கௌஹாத்தியில் நிறைவேற்றிய தீர்மானத்திலும் நிலச் சீர்திருத்தத்தின் அடிப்படையை ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். காங்கிரஸும் சரி, மத்திய சர்க்காரும் சரி, மாகாண சர்க்கார்களும் சரி, இதை ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இங்கே பேசக்கூடிய காலத்தில் நிலவரம்பு கூடாது என்ற நிலைமை ஏற்படுமேயானால், அது எந்த அளவிற்கு மனமாற்றம் என்று தெரியவில்லை.

ஏற்கனவே தானமாகக் கொடுக்கப்பட்ட பூமியெல்லாம் எந்த அளவிலே இருக்கிறது என்பதைப் பற்றி எதிர்க் கட்சி மெம்பர்கள் சொன்னார்கள். அது தானம் கொடுத்த நிலம் தானே, சர்க்கார் நிர்வாகம் தலையிடக் கூடாது, எல்லாம் அப்படியே நடக்க வேண்டுமென்று சொன்னார்கள். ஈகையைப் பற்றி கனம் கருத்திருமன் அவர்கள் பேசினார்கள். கம்பராமாயணத்திலிருந்தும், திருக்குறளிலிருந்தும் மேற்கோள் எடுத்துக் காட்டினார். அவர்களுக்கு எந்த விதமான அயன் நஞ்சை இருக்கிறது ? ஆனால் விநோபாஜி அவர்கள் கோபிக்குச் சென்றபோது 10 மிராசுதாரர்கள் சேர்ந்து 30-ஏக்கர் நிலம் மலை மேல் கொடுத்திருக்கிறார்கள். இது எப்பேற்பட்ட ஈகை என்று அறிய விரும்புகிறேன்.

SRI P. G. KARUTHIRUMAN : On a point of information. . . . . .

MR. SPEAKER : பாயின்ட் ஆப் இன்பர்மேஷன் எல்லாம் கடைசியில்தான். குறிப்பிட்ட நபரைப் பற்றிப் பேசுவது நல்லதல்ல. பொதுவாகப் பேசினால் போதாதா? நீங்கள் பேச, அவர் பேச, இது போய்க் கொண்டே இருக்கும்.

11-15 a.m. SRI N. K. PALANISAMI : ஆகவே, இந்த மசோதா கொண்டு வந்திருக்கிற சமயத்தில், எவ்வளவு பூமி நல்லதாக யிருக்கிறது, எவ்வளவு புறம்போக்கு நிலம், அதை எந்த அளவுக்குச் சாகுபடி செய்ய முடியும், எந்த அளவில் பணம் செலவாகும் என்ற அடிப்படையிலே ஒரு திட்டத்தைக் கொண்டு வந்தால் நன்றாக இருந்திருக்கும். எவ்வளவு பூமி நல்ல பூமி என்ற கணக்குத் தெரியாமல் இருப்பதால் இந்த மசோதா அவ்வளவு தெளிவாகயில்லை. சர்க்கார் நிர்வாகத்தில் தலையிடக்கூடாது, உதவி வேண்டுமானால் செய்யலாமென்று பல அங்கத்தினர்கள் சொன்னார்கள். இன்று விநோபாஜி அவர்கள் தேசத்திலுள்ள மக்களின் நன்மையைக் கருதி இம்மாதிரி இயக்கத்தை நடத்துகிறார்கள். ஆகவே நாம் இதை ஆராய்ந்து பார்த்தால், தேசத்தின் உணவுப் பெருக்கத்தை அனுசரித்தும், அந்தந்தப் பிரதேசத்தில் இருக்கக்கூடிய மக்களின் நன்மையை உத்தேசித்தும், சர்க்காரின் கீழ்தான் இந்த நிர்வாகத்தை நடத்த வேண்டும். சரியான முறையிலே, உணவு உற்பத்தியை அதிகரிக்கும்படியான வகையிலே ஒரு திட்டத்தையும் சேர்க்க வேண்டுமென்று சொல்லுகிறேன். இதை நிர்வகிப்பதற்கு ஒரு போர்டை ஏற்படுத்தப்போவதாகச் சொல்லுகிறார்கள். அந்த போர்டில் 10 மெம்பர்களிலிருந்து 14 மெம்பர்கள் வரையிலும் இருக்கலாமென்றும், விநோபாஜி அவர்களைக் கலந்து கொண்டே இந்த போர்டை அமைக்கவேண்டுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. நடைமுறையில் பார்க்கப்போனால், சர்க்கார் 10, 12 மெம்பர்களைப் பொறுக்கியெடுத்து விநோபாஜி அவர்களுக்கு எழுதி அனுப்புவார்கள். அதை "automatic" ஆக அவர்களும் ஒப்புக் கொள்வார்கள். அந்தந்த கிராமங்களிலே இருக்கக்கூடிய ஜனங்கள்தான் போர்டிலே மெம்பர்களாக இருக்க வேண்டும். அப்பொழுதுதான் அங்கே இருக்கக்கூடிய பிரச்னைகளை சர்க்காரிடம்

எடுத்துச் சொல்வதற்கும், என்னென்ன கஷ்டங்கள் இருக்கின்றன, என்னென்ன தேவைகள் இருக்கின்றன என்பதை எடுத்துச் சொல்வதற்கும் வாய்ப்பு ஏற்படும். சர்க்காராகப் பார்த்து 14 பேர்களை நியமிப்பது என்ற முறை இருக்கக்கூடாது. தலைவரை நியமிப்பதும் சர்க்கார் என்றிருக்கிறது. முறைப்படி எப்படியிருக்க வேண்டுமென்றால், போர்டைச் சேர்ந்தவர்களே தலைவரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும் என்ற உரிமை இருக்க வேண்டும். சர்க்கார் நியமிக்கும் முறை நல்ல தல்ல. போர்டு தனியாக இயங்குவதற்குப் பதிலாக, அதிலே ரெவினியூ காரியதரிசியும் மெம்பராக இருக்க வேண்டும். "எக்ஸ் அபிஷியோ" மெம்பராக இருக்க வேண்டும். கீழேயுள்ள கமிட்டிகளிலும், தாசில்தாரோ அல்லது கலெக்டரோ பங்கு எடுத்துக் கொண்டால், அந்தக் கமிட்டிகள் சரியானபடி நடக்கவும், அபிவிருத்தி வேலைகளைச் செய்வதற்கும் பிரயோஜனமாக இருக்கும்.

இந்த நிலங்களை ஏழைகளுக்குக் கொடுக்க வேண்டுமென்று இருக்கிறது. நிலம் இல்லாத விவசாயிகளுக்குத் தான் முதன் முதலாகக் கொடுக்க வேண்டும். இஷ்டமானவர்களுக்குக் கொடுக்கும் முறை இருக்கக்கூடாது. இதை எப்படிச் செய்ய வேண்டும் என்பதைப் பற்றி ஸ்ரீ மிஸ்ரா அவர்கள் எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். **"On a particular day, the public should be informed by tom tom"** அதாவது, தன்டோரா மூலமாக ஒரு குறிப்பிட்ட நாளில் எல்லா ஜனங்களையும் வரச் செய்து அவர்களுக்கு நிலத்தைப் பிரித்துக் கொடுக்க வேண்டும், அப்படிப் பிரித்துக் கொடுக்கும்போது எந்த விதமான பாரபட்சமும் காட்டப்படக்கூடாது.

அதுமட்டுமல்ல. இன்னும் சொல்லப்படுகிறது **"As far as possible one third of the land should be distributed to the Harijans"** என்று சொல்லப் பட்டிருக்கிறது. அதாவது நிலத்தைப் பிரித்துக்கொடுக்கக்கூடிய காலத்தில் குறைந்த பட்சம் மூன்றில் ஒரு பங்கையாவது அரிஜனங்களுக்குக் கொடுக்கப்பட வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. விதியைத் திருத்தக் கூடிய காலத்தில் இதன் அடிப்படையில் நிலத்தைப் பிரித்துக் கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும். நிலம் இல்லாத விவசாயிகளுக்கும், அதற்குப் பின்னால் கொஞ்சம் நிலம் இருக்கும் விவசாயிகளுக்கும் கொடுக்க வேண்டும். முதலில் அரிஜனங்களுக்கு மூன்றில் ஒரு பங்கைக் கொடுத்து விட்டு பாக்கியை இப்படிக் கொடுக்க வேண்டும். இந்த அளவில் நிலத்தைப் பிரித்துக்கொடுப்பதில் சர்க்காருக்கு முக்கியமான பொறுப்பு இருக்கிறது. இன்றைக்குப் பார்க்கிறோம் பல இடங்களில் விவசாயிகளுக்குக் கடன் தேவையாக இருக்கிறது. இதைப்பற்றி வினோபா அவர்களே சொல்லியிருக்கிறார். பூமியைக் கொடுத்து விட்டால் சிறந்த முறையில் எப்படி அவர்கள் விவசாயம் செய்வார்கள்? அவர்கள் நல்ல முறையில் விவசாயம் செய்வதற்கு நவீன யந்திரங்களை வாங்கிக்கொடுக்க வேண்டும். அப்படி நவீன யந்திரங்களை வாங்க வேண்டும் என்று கேட்டால் அதைக் கண்டிப்பாக வாங்க அனுமதிப்பதாகச் சொல்லியிருக்கிறார்கள். இப்பொழுது பூமிகளைக் கொடுத்திருப்பதைப் பார்த்தால் அவற்றில் பெரும்பாலும் மானம் பார்த்த பிரதேசத்தில் கொடுக்கப்பட்ட பூமியாகத்தான் இருக்கும். அவைகளில் விவசாயம் செய்ய வேண்டுமானால் நவீன யந்திரங்களை வாங்கிக் கொடுக்க வேண்டும். மற்றும் கிணறுகளில் இருக்கக்கூடிய தண்ணீரை எஞ்சின்கள் மூலமாக இறைத்து விவசாயம் செய்வதற்கும் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். கூட்டுறவு முறையில் விவசாயம் செய்வதற்கும் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும். அதற்கு ஏற்பட்டுள்ள செலவுகளை இன்ஸ்டால்மெண்ட் சிஸ்டத்தில் கொஞ்சம் கொஞ்சமாக வசூல் செய்து கொள்ளலாம். அங்கு உற்பத்தியாகும் பொருள்களை விற்பனை செய்வதற்கு கமிட்டிகளை அமைத்து விற்பனை செய்ய ஏற்பாடு செய்ய வேண்டும். இந்த முறையில் கமிட்டி இயங்கினால் விவசாயம் செய்வதை கண்காணிப்பதற்கும் சரிவர விற்பனை செய்வதற்கும் வசதியாக இருக்கும். அதனால் ஜனங்களுக்கும் பிரயோசனம் ஏற்படும், தேசத்திற்கும் நன்மையாக இருக்கும். அந்த அடிப்படைகளில் இந்த மசோதாவைத் திருத்தி அமைக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன்.

[15th February 1958

**SRI P. G. KARUTHIRUMAN :** ஆன் எ பாயிண்ட் ஆப் இன்பர்மேஷன், ஸார், இதற்கு முன்பு பேசிய கனம் அங்கத்தினர் அவர்கள் ஒரு தப்பான அபிப்பிராயத்தை அடிக்கடி சொல்லிக்கொண்டிருப்பதால் நான் சில விஷயங்களை விளக்க விரும்புகிறேன். கனம் நண்பர் எனக்கு நிறைய பூமி இருக்கிறது என்று சொல்லுகிறார். அவருக்கு எனக்கு உள்ள பூமியை விட அதிகமாக இருக்கிறது என்பதை ஞாபகப்படுத்துகிறேன். இது முதல் விஷயம். இரண்டாவதாக அவருக்கு பிறரிடத்திலிருந்து எடுத்துப் பழக்கம் உண்டு. அந்தப் பழக்கம் எனக்குக் கிடையாது. எனக்குப் பிறருக்குக் கொடுப்பது தான் வழக்கம். மற்றும் நான் பூமி தானமாக எண்பது எக்கர் நிலம் கொடுத்தேன் என்றும் அதையும் மலைப் பிரதேசத்தில் கொடுத்தேன் என்றும் சொல்லுகிறார். நான் சொல்லுகிறேன். நான் கொடுத்த பூமியின் தரம் அவருக்கு இருக்கக்கூடிய எல்லா பூமியின் தரத்தை விட உயர்ந்தது என்பதையும் கனம் நண்பருக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அப்படிக் கொடுத்த பூமியின் தரம் உயர்ந்தது என்பதையும் நிரூபித்துக்காண்பிக்க தயாராகவும் இருக்கிறேன் என்பதையும் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். நிலம் கொடுக்கும் விஷயத்தில் அவர் என்ன செய்தார், யாருக்குக் கொடுத்தார் என்று பார்த்தால் தன்னுடைய கட்சியின் கொள்கைப்படி "பாம்புக்கு தலையும், மீனுக்கு வாலும்" என்ற தன்மையில்தான் இருக்கிறது. ஆகவே நான் சொல்லிக்கொள்வது என்னவென்றால் கனம் பழனிசாமிக்கு இருக்கும் நிலங்களை விட நான் கொடுத்த நிலங்கள் எவ்வளவோ உயர்ந்தது என்பதை வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

11-23 a.m. **SRI G. GOMATHI SANKARA DIKSHITAR :** மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, பொறுக்குக் கமிட்டியிலிருந்து வந்த பூமி தான இயக்க மசோதா இப்பொழுது இங்கு சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது. அதை ஆதரித்து இரண்டொரு வார்த்தைகளைப் பேசுவதற்கு எனக்கு வாய்ப்புக் கொடுத்ததற்கு என்னுடைய நன்றியை முதலில் தெரிவித்துக்கொள்ளுகிறேன். நமது சட்டசபை புஸ்தகங்களில் அலங்காரமாக இருக்கக்கூடிய எல்லா சட்டங்களையும் விட இந்தச் சட்டம் மிகவும் மேலானது. இது கட்சி பாகுபாடோ, ஜாதி வித்தியாசமோ, இல்லாமல் அனைவரும் ஒத்துக் கொள்ளக்கூடிய சட்டம். இதில் ஜாதி மத வித்தியாசம் கிடையாது. அதனால் இது மிகவும் போற்றக்கூடிய சட்டம். நமது நாட்டினுடைய சுபிட்ச வாழ்க்கைக்கும் உலக சமாதானத்திற்கும் அடிகோலாக இருக்கக் கூடிய ஒரு சட்டம் இது என்று சொன்னால் அது மிகையாகாது. நமக்கு ஒரு சுதந்தர வாழ்க்கையை அளித்து, நாமும் சுதந்தரமாக வாழ்வதற்கும், அன்பு மயமாக, அகிம்சா முறையில் வாழ்வதற்கும், நமது மக்கள் உலக மக்களுடன் சமாதானமாக வாழ வேண்டுமென்று அளித்துவிட்டுப்போன மகாத்மா காந்தியின் அடிச்சுவட்டைப் பின் பற்றி இந்த தேசத்திலுள்ளவர்கள் சுபிட்சமாக வாழ்வதற்குக் கொண்டு வந்த இந்த சட்டமானது மிகவும் போற்றப்படுகிறது என்று சொன்னால் அது மிகையாகாது. மகாத்மா காந்தியின் அடிச்சுவட்டை பின்பற்றி வருகிற வினோபாஜி அவர்கள் ஆரம்பித்திருக்கின்ற இந்த இயக்கம் சர்வோதய இயக்கம், எல்லோராலும் போற்றப்படக் கூடிய இயக்கம். இந்த இயக்கத்தின் மூலமாக நில தானம், கிராம தானம், சம்பத் தானம், அறிவு தானம் இப்படிப்பட்ட எல்லா தானங்களும் மக்களுடைய மேன்மைக்கு, சமுதாயத்தின் நன்மைக்கு புத்துயிர் அளிக்கும் மாபெரும் இயக்கம். இது நம்முடைய நாட்டின் உயர்வுக்கும், சீரிய பண்பாட்டிற்கும், நமக்கு ஒரு ஆறுதல் அளிப்பதற்கும் இந்த மசோதாவானது வழி காட்டுகிறது. ஒரு போலீஸ் மந்திரி என்ற நிலைமையில் இல்லாதபடி இந்த இயக்கத்தில் பல வருஷங்களாக ஈடுபட்டு காந்தினுடைய பண்பாட்டை கடைப்பிடித்து நமது விவசாய மந்திரி ஸ்ரீ பக்தவத்சலம் அவர்கள் இந்த "பில்லைக்"கொண்டு வந்தது சரியான பொருத்தமாகும். இந்த "பில்" நடைபெறுகிற, நடத்தப்படுகிற ஒரு தன்மையின் மூலம் நமது நாட்டில் இருக்கக்கூடிய எல்லா கட்சிகளும் சேர்ந்து பிரிவினை மனப்பான்மை இல்லாமல், கட்சி மனப்பான்மை, ஜாதி மனப்பான்மை, மற்றும் இதர வேறுபாடுகள் இல்லாமல் ஒத்துழைத்து மக்களுடைய முன்

னேற்றத்திற்கு இந்த சட்டத்தின் மூலம் ஆவன செய்ய வேண்டும். இது அனைவருடைய சொந்தக் கடமையாக இருக்கிறது என்பதை நான் அறிவுறுத்த விரும்புகிறேன். தனிப்பட்ட முறையில் இது ஒவ்வொருவருடைய கடமைதான். சமாதான முறையில் "சேக்ரெட் மெஸேஜ்" என்று நமது நாட்டிற்கு அளித்துவிட்டுப்போனபடி நாம் நல்ல முறையில் அதைப் பின்பற்றி மக்களுக்கு நன்மையைச் செய்வதற்கு முற்பட்டு இந்த "பில்"ன் மூலமாக மக்களுக்கு ஆவன செய்ய வேண்டும். சமாதானக் கருத்தைக் கொண்டு உலகத்திலேயே சமாதானத்தை உண்டு பண்ணக்கூடிய பண்பாட்டில் இந்த இயக்கத்தில் நாம் பங்கெடுத்துகொண்டு மக்களுக்கு ஆவன செய்ய வேண்டும். நல்ல முறையில் கிராமங்களுக்கு என்னென்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்ய வேண்டும். இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தை நாம் நிறைவேற்றும்போது கிராமங்களுக்கு நாம் என்ன செய்ய வேண்டுமோ அவைகளை முழு மூச்சுடன் செய்வதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். கிராம மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கும் அவர்கள் சுபிட்சமாக வாழ்வதற்கும், சீர்திருத்தப்பாதையில் செல்வதற்கும் இந்த "பில்"லானது ஆவன செய்கிறது. நமது மகாத்மா காந்தி சொல்லி விட்டுப்போன கருத்திற்கிணங்க உலகத்தில் அடிமை என்ற வாழ்வு இல்லாமல் இருக்க வேண்டும். இருப்பதை வைத்துக்கொண்டு எல்லோரும் பங்கிட்டு எடுத்துக்கொள்ள வேண்டும். ஆகவே உலகத்தில் அடிமை என்று கருதாமல் இருக்க இந்த "பில்" கொண்டு வரப்பட்டிருக்கிறது. ஆகவே மக்களிடத்தில் பேரன்பு கொண்டு இதற்கு ஆவன செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். சிறு அளவில் இந்தச் சட்டம் நிறை வேறினால் சென்னை ராஜ்யத்தில் இது நல்ல முறையில் பயன்படும். இது மற்ற ராஜ்யங்களுக்கு வழி காட்டியாக இருக்கும். ஆகவே கட்சி மனப்பான்மை இல்லாமல், ஜாதி, மத பாகுபாடு இல்லாமல், பிரிவினை மனப்பான்மை இல்லாமல், அன்பு மயமாக இருக்க ஆவன செய்வார்கள் என்று சொல்லிக்கொண்டு இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன். ஜெய் ஹிந்த்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவை நானும் எங்கள் கட்சியினரும் முழு மனதுடன் ஆதரிக்கின்றோம். ஸ்ரீ விநோபாஜி அவர்கள் நீண்ட காலமாக தேச பிதாவுடன் ஒத்துழைத்தவர். அவர் இப்பொழுது பூதான இயக்கத்தில் முழு மூச்சுடன் ஈடுபட்டு, தன்னுடைய ஆயுளையே இப் பணிக்கு அர்ப்பணம் செய்து, பாரத தேசம் பூராவும் இதன் காரணமாக சுற்றுப் பிரயாணம் செய்து வருகின்றார். இந்த வகையில் அவர் முக்கியமான ஆக்க வேலையில் ஈடுபட்டிருக்கின்றார். இந்த மசோதா ரொம்பவும் வரவேற்கத்தக்கது. இதைப்பற்றி யாருக்கும் அபிப்பிராய பேதம் இருக்க முடியாது. எல்லாக் கட்சிகளும் இதில் ஒத்துழைப்பார்கள் என்பதைப்பற்றி எனக்குச் சிறிதும் சந்தேகமே இல்லை. எல்லாக் கட்சிகளும் இதில் ஒத்துழைப்பு தரவேண்டுமென்று ஆளும் கட்சியிலிருந்து அனேக அங்கத்தினர்கள் கேட்டுக்கொண்டார்கள். எதிர்க்கட்சியில் இருப்பவர்கள் எல்லோரும் ஒத்துழைப்பதற்குத் தயாராக இருக்கிறோம் என்பதை நான் வற்புறுத்திச் சொல்கிறேன். இந்த வகையில் எதிர்க் கட்சியினரும் நல்ல முறையில் ஒத்துழைப்பதற்கு வேண்டிய சாதனங்களை அவர்களுக்குக் கொடுத்து, அவர்களையும் உபயோகப்படுத்திக் கொண்டார்களானால், எதிர்க் கட்சியில் இருப்பவர்கள் எல்லோரும் எவ்வளவு ஒத்துழைக்க முடியுமோ அவ்வளவு ஒத்துழைக்கத் தயாராயிருப்பார்கள் என்று நான் சொல்கிறேன். 11-30 a.m.

இதில் முக்கியமாக இரண்டொரு கருத்தை மட்டும் நான் சொல்ல விரும்புகிறேன். இதற்கென கமிட்டிகளெல்லாம் போடுகிறார்கள். ஸ்டேட் போர்டு, லோகல் கமிட்டி என்றெல்லாம் போடுவதிலே நன்றாகப் பரிசீலனை செய்து, ஊக்கத்துடன் வேலை செய்யக்கூடிய ஆட்களையெல்லாம் பொறுக்கி எடுத்து அக்கமிட்டிகளிலே போடவேண்டுமென்று நான் கனம் அமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்ளுகிறேன். ஏனெனில் இந்த நிலத்தைப் பிரித்துக் கொடுப்பதில் அநேக தகராறுகள் ஏற்படக்கூடும். விநோபா அவர்களை

[Sri V. K. Ramaswamy Mudaliyar [15th February 1958

உபசரிக்கும் சந்தர்ப்பம் எனக்கு கிடைத்தது. என்னுடைய வீட்டிலே அவர் தங்கியிருந்தார். இந்த இயக்கத்தைப்பற்றியும், இதைப் பிரித்துக்கொடுப்பதில் உள்ள பிரச்னைகளைப்பற்றியும் அநேக மணி நேரம் நாங்கள் பேசிக்கொண்டிருந்தோம். "பிரித்துக்கொடுப்பதைப் பற்றி பிரச்சினைகள் ஏற்படுமே" என்று நான் அவரிடம் சொன்னபோது, அவர் சில விதங்களில் ஒப்புக்கொண்டார். தானமாகக் கொடுக்கப்பட்ட சில நிலங்கள் பாசன வசதி உள்ளதாக இருக்கும்; இன்னும் சில நிலங்களுக்கு தண்ணீர் வசதி குறைவாக இருக்கும். அப்படிப் பலவாறான நிலங்களைப் பிரித்துக் கொடுப்பதில் அநேகவித சச்சரவுகளும், பல ஊழல்களும் வந்து சேரும். அவைகளைத் தவிர்க்க வேண்டியது அவசியம். நிலங்கள் பல தரப்பட்டவைகளாக இருப்பதால் அவைகளைப் பிரித்துக் கொடுப்பதிலே ஏகப்பட்ட தகராறுகள் வரும். ஆகவே, இதற்கென உள்ள கமிட்டி நிலங்களை நல்ல முறையில், நியாயமான முறையில், பெறுபவர்களுக்கிடையே மனஸ்தாபம் இல்லாத முறையில் வினியோகம் செய்வதற்கு முற்படவேண்டும். இப்படிபட்ட நல்ல காரியத்தை மேற்கொள்ளும் கமிட்டி, நிலத்தை விநியோகம் செய்ய முன்வரும்போது, கிராமத்தில் பெரிய குழப்பங்களை உண்டுபண்ணுவதற்கு ஏதுவாக இருக்கக்கூடாதென்பதை நான் இங்கே வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். அமைச்சர் அவர்களும் இதைப்பற்றி தீர்க்க ஆலோசனை செய்யவேண்டும். நல்ல கமிட்டிகளாகப் போட்டு, அவர்களைக் கொண்டு இந்த நல்ல காரியத்தை நல்ல விதமாகச் செய்து முடிக்க வேண்டுமென்றுதான் நான் கேட்டுக் கொள்கின்றேன்.

பட்டாக்கள் செய்யும் விஷயத்திலும் சில தாமதங்களெல்லாம் ஏற்படும் என்று நான் ஊகிக்கிறேன் "**The object of the Bill is to facilitate the donation of lands to the Bhoodan Yagna movement inhated by Sri Acharya Vinoba Bhave and for that purpose to simplify the legal formalities necessary for transfer of lands. The Bill provides that any owner who is legally competent to donate the land may, on a declaration made in the prescribed manner, donate his land for the Bhoodan Yagna and that on such declaration being confirmed by the appropriate authority after holding an enquiry and hearing objections the land shall vest in the State Bhoodan Yagna Board.**" என்றெல்லாம் போட்டிருக்கிறார்கள். கடைசியிலே, "**Provision has been made for any person, whose interests are affeeted by the donation of lands, to institute a suit in the civil court to set aside an order confirming a donation.**" என்று இருக்கிறது. இந்த ப்ரொசீஜரைப் பார்த்தால், சில பேர் அநேகவிதமாக ஏதாவது ஒரு காரணத்தைக் கொண்டு கோர்ட்டுக்குப்போய் ஆட்சேபிக்கலாம். அதனால் காலதாமதம் ஏற்படுவதற்கும் இடம் இருக்கிறது. எப்படியிருந்தபோதிலும், ரெவினியூ இலாக்காவைக் கலந்து தான் செய்ய வேண்டிய வேலையாக இருக்கும். ஆகவே, **simplified procedure** ஒன்றை ஏற்படுத்தவேண்டும். ஒரு குறிப்பிட்ட சில தினங்களுக்குள் யாராவது ஆட்சேபணை இருந்தால் தெரிவித்துக்கொள்ள வேண்டும் என்ற வகையிலே தாலுக்கா ஆபீசிலிருந்து ஒரு நோட்டீஸ் பிறப்பித்துவிட வேண்டும். ஆகவே, எவ்வளவு சீக்கிரத்தில் நிலத்தை விநியோகம் செய்து, அவரவர்களுக்குப் பட்டா செய்து கொடுக்க முடியுமோ அம்மாதிரி செய்வதற்கான முறைகளைக் கையாளவேண்டும். அதற்கான விதிமுறைகளை ஏற்படுத்த வேண்டும். ஸிவில் கோர்ட்டுக்குப் போனால் வருஷக் கணக்காக ஸ்டே ஆர்டர் வாங்கக்கூடும். ஒரு சிலர் அப்படி ஸிவில் கோர்ட்டுக்குப் போனாலும், எத்தனை தடவை வரையிலும் போகமுடியும் என்பதையும் பார்க்க வேண்டும். இதைப்பற்றியும் பரிசீலனை செய்யும்படி நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

கடைசியாக, கமிட்டிகளெல்லாம் நான்கு வருஷங்கள் பதவியில் இருக்க வேண்டுமென்று போட்டிருக்கிறார்கள். என்னைப் பொறுத்தமட்டில் அவ்வளவு நாள் தேவையா என்று நான் கேட்கிறேன். ஒரு கமிட்டி நல்ல முறையில் வேலை செய்தால் அக்கமிட்டியை மேலும் நீடித்து வைப்பதற்கு சர்க்காருக்கு அதிகாரம் இருக்கிறது. எப்படியும் மூன்று

வருஷங்களுக்கு மேல் ஒரு கமிட்டி இருக்கக்கூடாது என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். இதையெல்லாம் யோசனை செய்ய வேண்டும். இந்த மசோதா சென்ற சட்டசபைக் கூட்டத்திலேயே வந்திருக்க வேண்டும். இருந்தாலும், இதை எவ்வளவு சீக்கிரம் அமுலுக்குக் கொண்டு வரவேண்டுமோ அவ்வளவு சீக்கிரம் கொண்டு வந்து நில விநியோகத்தை நல்ல முறையிலே, விரைவிலே செய்து முடிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு என்னுடைய வார்த்தையை முடித்துக்கொள்ளுகின்றேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் சபாநாயகர் அவர்களே, பூமிதான இயக்கத்தின் உயர்ந்த இலட்சியத்திற்கு ஏற்றவாறு இந்த விவாதத்தில் கலந்துகொண்ட கனம் அங்கத்தினர்கள் உயர்ந்த தத்துவங்களையெல்லாம் விளக்கிப் பேசினார்கள். சில சந்தேகங்கள் பற்றியும், குறைபாடுகளைப்பற்றியும் சொன்னார்கள். சில யோசனைகளும் அளித்தார்கள். கனம் அங்கத்தினர் திரு. பழனிசாமி அவர்கள் தனக்கு ஏற்பட்ட பிரத்தியேக பாணியில் இந்த மசோதாவை விமரிசனம் செய்தார்கள். 11-37 a.m.

இதிலே "தானம்" என்று இருக்கிறது. தனக்குச் சொந்தமான பூமியைப் பிறருடைய உபயோகத்திற்கு அளிப்பது என்பதுதான இதனுடைய அடிப்படை. ஈகை உயர்ந்தது என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்வார்கள். கனம் அங்கத்தினர் திரு. பழனிசாமி அவர்களும் ஒப்புக் கொள்ளுகிறார்கள். ஈகை உயர்ந்தது என்றால், கொடுக்கின்றவன் பிரமாதமாக நினைத்தால் அது தவறு. அதேமாதிரி, அந்த ஈகையினால் பலன் அடைகிறவர்களோ மற்றவர்களோ அதைக் குறைகூறுகிறார்கள் என்றால், அதுவும் தவறுதான் என்பதை கனம் அங்கத்தினர் அவர்கள் உணருவார்கள். "தானம் கொடுத்த பசுவைப் பல்லைப் பிடித்துப் பார்க்கக் கூடாது" என்பது பழமொழி.

எவ்வளவு மதிப்பு உள்ள சொத்தாய் இருந்தாலும் அதில் இருந்து பிறருக்கு ஒரு பகுதியை எடுத்துக்கொடுக்கும்போது, அந்தக் "கொடுக்கும் மனோபாவம்" காணப்படுகிறதே அதுதான் இந்தப் பூமிதான இயக்கத்தின் அடிப்படை; ஸ்ரீ வினோபாஜி அவர்களுடைய இயக்கத்தின் அடிப்படை. தன்னிடம் உள்ளதை தானே அனுபவிக்காமல் மற்றவர்களுடன் சேர்ந்து அனுபவிக்கும் மனோபாவம்தான் முக்கியம். தனக்குரியதை எடுத்து மற்றவர்களுக்கும் கொடுக்கக்கூடிய அந்த மனோபாவம்தான் முக்கியமானது. அது அவசியம் வேண்டும்.

அப்படி இல்லாமல், தனக்கு இருக்கும் சொத்தே போதாது என்று எங்கெங்கே கிடைக்கிறது, யார் யாரிடம் பறிக்கலாம், யார் யாரை ஏமாற்றலாம் என்று சிந்தித்து, பிறருடைய சொத்தை எடுத்து தம்முடையதோடு சேர்த்துக் கொள்ளக்கூடிய மனப்பான்மை இருப்பதை நாம் பெருவாரியாகக் காண்கிறோம். இதற்கு மாறாக, இந்தச் சொத்துக்கூட நம்முடையது அல்ல, சமுதாயத்திற்கு உரியது, ஆகவே, ஓரளவுக்கு நாம் நம்மிடமிருந்து பிறருக்குக் கொடுப்போம் என்று சிந்திக்கக்கூடிய மனப்பான்மைதான் முக்கியமானது.

ஆனால், கனம் அங்கத்தினர் திரு. ஆசைத்தம்பி அவர்களுக்கு இதெல்லாம் புரியவில்லை. நிரந்தரமாகச் சாப்பாட்டுக்கு அரி வேண்டும்; குறைந்த விலைக்குக் கொடுக்கவேண்டும், சர்க்காருடை தயவால் நமக்கு குறைந்த விலைக்குக் கிடைக்கவேண்டும் என்று சொல்வது சரியல்ல. அது சுயமரியாதைக்கு உகந்தது அல்ல என்று நான் சொன்னேன். அதற்கு இந்தப் பூமிதான இயக்கத்தின் தத்துவத்திற்குள் உள்ள வித்தியாசம் அவர்களுக்குப் புரியவில்லை. எப்படிப் புரியும்? ஏதோ சர நாட்டு அரசன் வட நாட்டுக்குச் சென்று யாரையோ வென்று, ஏதோ கல்லைத் தூக்கிக்கொண்டு வந்தான், அம்மாதிரி யெல்லாம் நான் சொல்லவில்லை என்று நினைக்கிறவர்களுக்கு அது புரியாததிலே நமக்கு ஒன்றும் ஆச்சரியம் இல்லை.

[Sri M. Bhaktavatsalam] [15th February 1958

ஆனுல், இந்தப் பூமிதான இயக்கத்தின் தத்துவம் நிலம் மனிதனுல் ஆக்கப்பட்டது அல்ல. இயற்கையாக வந்தது. உலகத்தோடு வந்தது. மனிதன் நிலத்தைத்திருத்தி உழுது உற்பத்தி செய்கிருனே தவிர நிலம் மனிதனுல் ஆக்கப்பட்டது அல்ல. வீடுகள் மனிதன் கட்டிய வீடுகள். தொழிற்சாலேகூட மனிதன் தாயரித்ததுதான். மனிதனுல் தயாரிக்கப்படாதது, உண்டுபண்ணப் படாதது நிலம், நீர், காற்று எல்லாம். மனிதனேடு சேர்த்து, மனிதன் எல்லோருக்குமாகப் படைக்கப்பட்டவைகள். அந்த நிலத்தை, இயற்கையால் படைக்கப்பட்ட நிலத்தை என்னுடையது, உன்னுடையது என்று பிரித்துக்கொள்வது என்பதே தவருனது. இப்படிப்பட்ட அடிப்படையில் ஸ்ரீ விஞேபாஜி அவர்கள் தம்முடைய தத்துவங்களே வற்புறுத்தி வருவதை நாம் எல்லோரும் அறிவோம். "இது என்னுடையது. இதை எதற்காகப் பிறருக்குக் கொடுப்பேன்" என்பதாக உரிமை பாராட்டிக்கொண்டிருக்கும் எண்ணம் பலருக்கு இருக்கலாம். ஆனுலும் சமுதாயத்தின் தேவைக்காக ஓரளவு கொடுப்போம் என்ற முறையில் அமைந்திருப்பது பூதான இயக்கம். அதை விட உயர்ந்தது கிராமதானம். கிராம தானத்தில் நிலத்தை வைத்துக்கொண்டிருப்பவர்கள் எல்லாவற்றையும் கொடுக்கிருர்கள். ஆனுல் ஒன்று. நிலத்தை எல்லோருக்கும் கொடுக்க முற்படுவதன் மூலம், இந்த அடிப்படையின் மூலமாகவே நம்முடைய நிலப்பிரச்சினேயைத் தீர்த்துவிட முடியுமா என்ருல், தீர்த்துவிடக் கூடும் என்று நாம் எதிர்பார்க்க வில்லே.

ஒரு ஆண்டுக்கு முன்பு—சில சம்பவங்களுக்கு முன்பு—மைசூரைச் சேர்ந்த பக்தத் எல்வால் என்ற களத்தில் பூதான சமயத்தில் மகாநாடு நடந்தது. விஞேபாஜி அவர்கள் அந்த மகாநாட்டைக் கூட்டினுர்கள். நமது பிரதம மந்திரி அவர்களும், நாட்டுத் தலேவர்கள் எல்லோரும் கூடி விவாதித்தார்கள். அதில் கூட விளக்கப்பட்டது. இந்த கிராம தானத்தையும், பூதானத்தையும் மேலும் மேலும் ஆதரித்து விஸ்தரிக்க வேண்டுமென்றும், மற்ருெரு பக்கத்தில் சட்டம் இயற்றி, சட்டத்தின் மூல மாக நிலப் பிரச்சினேயை நல்ல முறையில் தீர்க்க வேண்டும் என்றும் அப்போது கூடிய தலேவர்கள் விளக்கினுர்கள். எல்லாவற்றுக்கும் சட்டம் வரட்டும் என்ருல் சட்டம் எப்படியும் வரும். எந்த அளவுக்கு நிலச் சீர்திருத்தம் படிப்படியாக வரவேண்டுமோ அந்த அளவுக்குச் சட்டமும் வந்துகொண்டிருக்கிறது. சட்டத்தை எதிர்பார்க்காமல் பலாத்காரமாக நிலத்தைப் பிடுங்கிக்கொண்டார்கள் என்ற எண்ணத்திற்கு இடம் இல்லா மல் மக்கள் மனம் மாறவேண்டும். மக்கள் மனம் நல்ல வகையில் மாற வேண்டும். அதற்கு வேண்டிய சட்டங்களேச் செய்வோம். அவை நல்ல வகையில் பயன்படும் என்ற அளவில் பூமிதான இயக்கத்தையும், கிராமதான இயக்கத்தையும் வளர்ப்பதும், அவைகளே நாம் பயன்படுத்திக் கொண்டு உழைக்க வேண்டியவர்களாக இருக்கிருேம். பூதானம் என்று கொடுக்கிருர்கள். பிறருடைய உபயோகத்துக்காகக் கொடுக்கிருர்கள். அவை நிலம் இல்லாதவர்களுக்கு வழங்கப்படுகிறது. நிலம் இல்லாதவர் களுக்கு வழங்கப்படுவதில் உள்ள சிக்கல்களேப் பற்றி ஏற்கனவேயுள்ள அங்கத்தினர்கள் சொன்னுர்கள். அதற்காக இவைகளேக்கவனிப்பதற்காக போட்டிருக்கிற போர்டு, விஞேபாஜி அவர்களுடைய இயக்கம், அவர்க ளுடைய கருத்துககு எற்ற வகையில் இதை நிறைவேற்ற நம்மாலானதைச் செய்ய முற்படுகிருேம். அரசாங்கமும் முற்படுகிறது. ஆகவே விஞேபாஜி அவர்களுடைய யோசனேயைக் கேட்டு, அவர்களுடைய அங்கீகாரத்தைப் பெற்று, அவர்களுடைய யோசனேக்கு ஏற்றவாறு நடந்துகொள்கிற வகை யில் இந்த போர்டை அமைத்து காரியங்களேச் செய்யச் சொல்லுவது அரசாங் கத்தின் நோக்கம். அரசாங்கம் இதில் தலேயிட வேண்டும் என்ற எண்ணம் இல்லே. ஆனுல் அரசாங்கம் எந்த அளவுக்கு கவனம் செலுத்த வேண்டுமோ, அந்த அளவுக்குக் கவனம் செலுத்தி, சிக்கல்களுக்கு இடம் கொடாமல் இருக்க இந்த மசோதாவில் வறையரை செய்யப்பட்டிருக்கிறது. வேறு சிக்கல்கள் ஏற்படக்கூடும். ஒரு மனிதன் வேண்டுமென்றே சில சிக்கலே ஏற்படுத்தலாம். சிவில் வியாஜ்யத்திற்கு இடம் கொடுக்க

15th February 1958] [Sri M. Bhaktavatsalam]

லாம். அதையெல்லாம் தவிர்க்கவும், கவனம் செலுத்தப்பட்டு இந்த மசோதா அமைக்கப்பட்டிருக்கிறது. இதை நான் கனம் அங்கத்தினர்களுக்கு எடுத்துக் கூறவேண்டிய அவசியம் இல்லை.

நிலத்தின் சொந்தக்காரர் நிலத்தைக் கொடுத்தால் ஒருவகையில் நிலம் இல்லாதவர்களுக்குக் கொடுப்பது, பகிர்ந்து கொடுப்பது, அவ்வாறு பகிர்ந்து கொடுப்பதில் ஒன்று நாம் கவனிக்க வேண்டும். எல்லோருக்கும் தாராள மனப்பான்மையுடன் நிலத்தைக்கொடுத்தாலும் நிலம் குறைவு; ஜனத் தொகை அதிகம். ஆகவே இதை கவனித்துக் கொடுக்கவேண்டும். அதற்காகத்தான் இந்த போர்டு அமைக்கப்பட்டிருக்கிறது. அவ்வாறு கொடுத்த நிலங்களில் அவரவர்கள் தங்களுடைய சொந்த நிலம் போல பயிரிடுவது ஒருவகை. ஆனால் கிராமதானத்தின் அடிப்படை வேறு. அங்கே உள்ளவர்கள் கிராமத்திலுள்ள நிலத்தை வைத்துக் கொண்டிருக்கிறவர்கள் தங்கள் நிலம் பூராவையும் கொடுக்கிறார்கள். அந்த நிலத்தின் சொந்தக்காரர் பூரா நிலத்தையும் கொடுத்து தானம் செய்யப்படுகிறது. மற்றவர்களுக்கு வழங்குவதில்லை. ஒரு ஏக்கர், இரண்டு ஏக்கர் உள்ளவர்கள் கூட மதுரை ஜில்லாவில் தானம் வழங்க முன் வந்திருக்கிறார்கள். நாம் எல்லோரும் சேர்ந்து வாழவேண்டுமென்ற கருத்தோடு முன் வந்திருக்கிறார்கள். அவர்களே கொடுத்துவிட்டார்கள். அந்த நிலங்களை சமுதாயம் பூராவும் சேர்ந்து பயிரிட்டு, சமுதாயம் பூரவும் பலனை அடைய வேண்டும். அந்த வகையில் நாம் ஏற்பாடு செய்ய வேண்டியிருக்கிறது. ஏற்பாடு செய்வதற்காக உரிய பஞ்சாயத்து ஸ்தாபனத்திற்கு சர்வோதய பஞ்சாயத்து என்று பெயர். கூட்டுறவு முறையில் எல்லோரும் சேர்ந்து பாடுபடுவது என்பதற்குரிய வழிவகை வகுக்கப்பட்டாலன்றி நிலப்பிரச்சினையை சுலபமாகத் தீர்க்க முடியாது. ஆகவே அந்த அடிப்படை வற்புறுத்தப்பட்டு வருகிறது. சிறந்த வகையில் உற்பத்தி குறைவுபடாமல் எல்லோரும் சேர்ந்து வாழ்க்கை நடத்தக் கூடிய மனோபாவத்தை வளர்ப்பதற்கு இது பயன்படும். அதற்காகத்தான் இந்த மசோதா அமைக்கப்பட்டிருக்கிறது. ஆகவே இந்த மசோதாவின் பிரிவுகளை எல்லாம், பொதுவான வகையில் கிராமதானம், பூதானம் இவற்றின் அடிப்படைகளை எல்லாம் எப்படி ஆதரித்துப் பேசினார்களோ, அப்படியே ஆதரித்து இதை மனப்பூர்வமாக வரவேற்பார்கள் என்று நம்பி எனது வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

MR. SPEAKER: Motion moved—

"That the Madras Bhoodan Yagna Bill 1957 (L.A. Bill 11-50 a.m.
No. 15 of 1957) as amended by the Joint Select Committee be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

*Clause 2.*

MR. SPEAKER: The motion is that clause 2 do stand part of the Bill.

SRI P. G. KARUTHIRUMAN: Sir, I beg to move the following amendments:

(*a*) In sub-clause (*e*) *for* the words "one or more persons" *substitute* the words "not less than two-thirds of the number of persons owning lands".

(*b*) In sub-clause (*e*) for the words "two-thirds" *substitute* the words "one-half".

The amendments were duly seconded.

MR. SPEAKER: The Hon. Minister will reply to the amendments.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: I accept the amendments.

MR. SPEAKER: The question is—

(a) In sub-clause (e) *for* the words "one or more persons" *substitute* the words "not less than two-thirds of the number of persons owning lands".

(b) In sub-clause (e) *for* the words "two-thirds" *substitute* the words "one-half".

The amendments were put and carried.

Clause 2 as amended was put and carried.

Clause 3 was put and carried.

*Clause* 4.

MR. SPEAKER: The motion is that clause 4 do stand part of the Bill.

SRI N. K. PALANISAMI: Sir, I beg to move—

'*For* sub-clause (1) *substitute* the following, namely:

"(1) *Constitution of State Board*: The State Board shall consist of a Chairman who shall be elected by the Board from among its members and ten or more but not exceeding 14 other members who shall be appointed by the Government from among the Members of the Sarvodaya Panchayats in consultation with Sri Acharya Vinobha Bhave or a person nominated by him in writing in this behalf. The Secretary to Government Revenue Department shall be a Member of the Board, Ex-Officio." '

The amendment was duly seconded.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இந்தத் திருத்தத்தை நான் எதிர்க்கிறேன். அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கும்போது ஸ்ரீ வினோபாஜியைச் சேர்ந்தவர்களைக் கலந்து கொண்டுதான் நியமிக்கிறார்கள். இதற்கு ஏற்றவர்கள் கிராமத்தில் இருந்துதான் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். அம்மாதிரியே தலைவரையும் சேர்த்து நியமிக்கப்படுவதுதான் நல்லது. இது புதிய இயக்கம் ஆதலால் இதில் வீணான கட்சி பிரச்னைகளுக்கு இடம் கொடுக்கக்கூடாது என்பதுதான் அரசாங்கத்தின் நோக்கம். இரண்டாவதாக அரசாங்க காரியதரிசி இருக்கவேண்டுமென்று சொன்னார்கள். அரசாங்கத் தலையீடு இல்லாமல் அவர்களுக்கு உதவி அளிக்கவேண்டுமென்றோ எந்த விதமான மேற்பார்வை இருக்கவேண்டுமோ அந்த அளவிற்கு உதவி செய்து வரவேண்டும் என்பதுதான். அங்கங்கே அவர் அவர்கள் அதை கவனித்து ஏற்பாடு செய்துக்கொள்ளட்டும் என்பதுதான் அரசாங்கத்தின் எண்ணம், ஆகவே இந்தத் திருத்தத்தை நான் எதிர்க்கிறேன்.

The amendment was put and lost.

Clause 4 was put and carried.

Clauses 5, 6, and 7 were put and carried

15th February 1958]

*Clause 8.*

MR. SPEAKER : The motion is—

" That clause 8 do stand part of the Bill."

SRI N. K. PALANISAMI : Sir, I move that in sub-clause (1) *for* the word " Government " *substitute* the words " State Board ".

MR. SPEAKER : Nobody has seconded it. So, the amendment falls through for want of a seconder.

Clause 8 was put and carried.

Clauses 9 to 14 were put and carried.

*Clause 15.*

MR. SPEAKER : The question is—

" That Clause 15 do stand part of the Bill."

SRI N. K. PALANISAMI : Sir, I beg to move that—

' *For* Sub-clause (2) *substitute* the following, namely :—

" (2) The Chairman of the local committee shall be elected by it from among its members." '

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, எற்கெனவே லோகல் கமிட்டிக்கு ஒரு சேர்மென்னை ஏற்படுத்தும்போது சர்க்காருக்கு தகவல் தெரியவேண்டாம் என்று இல்லை. தெரியட்டும். அந்தந்த பிரதேசத்தில் இருக்கும் ஜனங்கள் அந்தந்த அங்கத்தினர்களை தேர்ந்தெடுக்கக்கூடிய முறையிலே இருந்தால் ஜனநாயக முறையிலே தீர்மானம் செய்வதற்கும், நடைமுறையிலே வேலை செய்வதற்கும் சௌகரியமாக இருக்கும். அந்தக் கமிட்டியில் அரசாங்க கலெக்டரோ, தாசில்தாரோ பங்கு கொள்ளவேண்டுமென்ற முறையிலே ஏற்பட்டால் மந்திரி அவர்கள் எதிர்ப்பார்க்கும் அளவிற்கு நல்ல முறையிலே காரியங்கள் நடைபெறும். சர்க்கார் தலையீடு இல்லையென்றால் காரியங்கள் சரிவர நடைபெறாது. ஜனநாயக முறையில் நடைபெற வேண்டுமென்றால், அங்கத்தினர்களே ஒரு தலைவரை தேர்ந்தெடுப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சர்க்கார்தான் அங்கத்தினர்களை நியமிக்கிறார்கள் அதேமாதிரியாக தலைவரையும் சர்க்கார்தான் நியமிக்கவேண்டும் என்பது அடிப்படை. இதிலே ஜனநாயகம் பாதிக்கப்படுகிறதென்ற பிரச்னையே இல்லை. இந்த இயக்கம் நன்றாக நடைபெற வேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் நோககம். அதிகாரிகளின் உதவி எந்த அளவிற்கு வேண்டியிருக்கிறதோ அந்த அளவிற்கு அவர்களுடைய உதவி கிடைக்கும். நான் அந்தத் திருத்தத்தை எதிர்க்கிறேன்.

MR. SPEAKER : Is ths hon. Member pressing his amendment.

SRI N. K. PALANISAMI : Yes, Sir, I am pressing.

The amendment was put and lost.

Clause 15 was put and carried.

Clauses 16 to 20 were put and carried.

### *Clause* 21.

MR. SPEAKER : The motion is—

"That clause 21 do stand part of the Bill."

SRI N. K. PALANISAMI : Sir, I beg to move the following amendment, namely :

'*Delete* the words "or the State Government" and *number* the clause as sub-clause (1) and *insert* the following as sub-clause (2), namely :—

"(2) The State Government shall allot necessary amount from time to time to meet the expenditure connected with the purchase of modern agricultural implements, for agricultural operations for the improvement of the land".'

The amendment was duly seconded.

MR. SPEAKER : The motion and the amendment are before the House for discussion.

SRI N. K. PALANISAMI : நவீன முறையிலே விவ்சாயம் செய்வதற்கும் நவீனக் கருவிகளை உபயோகப் படுத்துவதற்கும் ஸ்ரீ விநோபாஜிக்கு எந்தவிதமான ஆட்சேபணையும் இல்லை. ஆனால் கொடுக்கப்பட்ட நிலம் ஏற்கெனவே இருக்கின்ற நிலைமையில் இருந்தால் என்ன பிரயோஜனம். அதை புதிய முறையிலே விவசாயம் செய்தால்தான் மிகவும் நல்லது. மத்திய சர்க்காரிடமிருந்து அதற்குப் பணம் வாங்கவேண்டும். மாகாண சர்க்காரும் அதற்கு உதவவேண்டும். இந்த அடிப்படையிலேதான் என்னுடைய திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கிராமதானத்தின் மூலமாக அளிக்கப்பட்ட நிலங்களில் நல்ல முறையிலே விவசாயம் செய்வதற்கு சர்க்கார் 20 லட்சம் ரூபாய் கடன் அளிப்பது என்று ஏற்பாடு செய்து இதைக் கொடுப்பதற்கு சர்க்கார் பணம் ஒதுக்கியிருக்கிறார்கள் அந்தப் பிரதேசங்களை யெல்லாம், சமுதாய நலத் திட்டத்திலும், தேசியவளர்ச்சி திட்டத்திலும் சேர்ப்பதற்கு ஏற்பாடாகிவருகிறது. கூட்டுறவு முறையில் விவசாய வளர்ச்சிக்கான உதவிகளெல்லாம் செய்யப்படும். இதை யெல்லாம் இந்த மசோதாவிலே காட்டவேண்டிய அவசியம் இல்லை. இது மக்களால் தானமாக வழங்கப்பட்டது. இப்பொழுது கொண்டுவந்த திருத்தத்தை நான் எதிர்க்கிறேன்.

MR. SPEAKER : Is the hon. Member pressing his amendment?

SRI N. K. PALANISAMI : Yes, Sir, I am pressing.

The amendment was put and lost.

Clause 21 was put and carried.

Clauses 22 to 25 were put and carried.

### *Clause* 26.

MR. SPEAKER : The Motion is—

'That Clause 26 do stand part of the Bill.'

15th February 1958]

SRI N. K. PALANISAMI : Sir, I move—

'In item (*d*) of sub-clause (2) *after* the words "recover those advances", *add* the words "in easy instalments".'

SRI A. R. MARIMUTHU : Sir, I second the amendment.

MR. SPEAKER : The caluse and the amendment are before the House for discussion.

SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த நிலங்களை தானமாக கொடுத்தவர்களுக்கு தக்காவிக் கடன் போன்ற கடன் வசதிகள் செய்துக்கொடுக்கப்படவில்லை. அவர்களுக்கு அப்படிக் கொடுத்து உதவும்போது அவர்கள் திருப்பித்தரும் தவணைகளை அதிகமாக்கவேண்டும். என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATASLAM : 'ஈஸி இன்ஸ்டால்மெண்ட்ஸ்'-ல் கடன் தொகையை திரும்பப் பெறவேண்டும் என்று திருத்தம் பிரேரேபிக்கப்பட்டிருக்கிறது. 'ஈஸி இன்ஸ்டால்மெண்ட்ஸ்' என்றால் 15 தவணைகள் சௌகரியமான தவணைகளா ? 20 தவணைகள் சௌகரியமான தவணைகளா? 25 தவணைகள் சௌகரியமான தவணைகளா ? எப்படி இருந்தால் அவை சௌகரியமான தவணைகளாக இருக்கும் என்பதை சட்டத்தில் நிர்ணயிக்க முடியாது. ஆகவே இது ஒழுங்கான திருத்தம் அல்ல என்று சொல்லிக்கொள்கிறேன். கடனைத் திரும்பப் பெறும்போது அனுசரிக்கவேண்டிய முறைகள்பற்றி விதிகள் இருக்கின்றன. விவசாயக் கடன்களை எவ்வாறு திருப்பப் பெறுவது என்பதுபற்றி விதிகள் இருக்கின்றன. கூட்டுறவுப் பண்ணைகளுக்குக் கொடுக்கப்படும் கடன்களை எந்த முறைகளை அனுசரித்து திரும்பப்பெறவேண்டும் என்பது பற்றி விதிகள் இருக்கின்றன. ஆகவே கடன் தொகையைத் திரும்பப் பெறும் விஷயத்தில் அனுசரிக்கவேண்டிய முறைகளைச் சர்க்கார் அப்போதைக் கப்போது கவனித்துக்கொள்ளும். ஆகவே இந்தத் திருத்தத்திற்கு அவசியமில்லை என்று சொல்லி இந்தத் திருத்தத்தை நான் எதிர்க்கிறேன்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, I want a clarification from the Hon. Minister whether it would be brought under the Loans and Advances Scheme for payment in three or four instalments.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : It will depend upon the circumstances.

MR. SPEAKER : Is the hon. Member Sri N. K. Palanisami pressing his amendment.

SRI N. K. PALANISAMI : I am pressing it Sir.

MR. SPEAKER : The question is–

'In item (*d*) of sub-clause (2) after the words "recover those advances" *add* the words "the easy instalments".'

The amendment was put and lost.

Clause 26 was put and carried.

Clauses 27 and 28 were put and carried.

Clause 1 and the preamble were put and carried. 12 noon.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move—

"That the Madras Bhoodan Yagna Bill, 1957, (L.A. Bill No. 15 of 1957) as amended be passed."

கனம் சபாநாயகர் அவர்களே, பல்வேறு கட்சிகளைச் சேர்ந்த கனம் அங்கத்தினர்கள் எல்லோரும் இந்த மசோதாவை ஒருமுகமாக ஆதரித்தார்கள். அதைநான் பாராட்டுகிறேன். பூமிதான இயக்கத்தையும் கிராமதான இயக்கத்தையும் எல்லோரும் ஆதரிக்கிறார்கள். வினோபாஜீயால் தொடங்கப்பட்டு நடத்தப்பட்டு வரும் இந்த இயக்கங்கள் புரட்சிகரமானவை. உலகத்தையே கவர்ந்துள்ள பூதான இயக்கம் இன்னும் சிறந்த முறையில் நடத்தப்பட்டு வெற்றிபெறும். அதற்கு வேண்டிய ஆதரவை கனம் அங்கத்தினர்கள் பரிபூரணமாக அளிப்பார்கள் என்பதில் எனக்கு ஐயமே இல்லை. இந்த மசோதா ஒரு புதிய மசோதா, புதிய முறையில் சட்டமியற்றப்படுகிறது. இந்த மசோதா சம்பந்தமாக அபிப்பிராயபேதங்கள் இருந்திருக்கக்கூடும். இருந்தாலும் பொதுவாக, கனம் அங்கத்தினர்கள் எல்லோரும் இந்த மசோதாவிற்கு மகத்தான ஆதரவை அளித்தார்கள். கனம் அங்கத்தினர் ஸ்ரீ. பழனிசாமி கூட ஏதோ திருத்தங்கள் பிரேரேபிக்க வேண்டுமென்பதற்காகத்தான் திருத்தங்கள் பிரேரேபித்தார். குறைகளை எடுத்துச்சொல்வது அவசியம் தான். யாருக்கும் சந்தேகங்கள் ஏற்படக்கூடும். இருந்தாலும் கனம் அங்கத்தினர்கள் எல்லோரும் மசோதாவை ஆதரித்ததைப் பாராட்டுகிறேன்.

இந்த சமயத்தில் மற்றொரு விஷயத்தைத் தெளிவாகச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். நேற்று மதுவிலக்கு சம்பந்தமாக மசோதா கொண்டுவரப்பட்டு, அது பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பப்பட வேண்டும் என்ற பிரேரேபணையும் கொண்டுவரப்பட்டது. அது இந்த சபையில் எந்த விவாதமும் இல்லாமல் நிறைவேற்றப்பட்டது. கனம் அங்கத்தினர்கள் அந்த மசோதா வந்தபோது எவ்வளவோ குறைகளை எடுத்துச்சொல்லியிருக்கக் கூடும். இருந்தாலும் எவ்விதத் தடங்கலும், பேச்சும், விவாதமும் இன்றி அந்த பிரேரேபணை நிறைவேற்றப்பட்டது. மதுவிலக்கு சம்பந்தமான அந்தப் பிரேரேபணை அவ்வாறு நிறைவேற்றப்பட்டதிலிருந்து நான் ஒன்று தெரிந்து கொண்டேன்; மதுவிலக்குத் திட்டத்திற்கு எல்லாக் கட்சிகளும் எவ்வளவு ஆதரவு அளிக்கின்றன என்பதைத் தெரிந்துகொண்ட நான், அந்தத் திட்டத்தை பரிபூரணமாக நிறைவேற்றுவதற்கும் அவைகள் தங்கள் பரிபூரண ஆதரவைக் கொடுக்கும் என்று நினைத்து மகிழ்ச்சியடைந்தேன். இந்த மசோதாவிற்கும் சபையிலுள்ள கனம் அங்கத்தினர்கள் எல்லோரும் தங்கள் பரிபூரண ஆதரவைக் கொடுத்தற்காக அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொண்டு, என் பிரேரேபணையை சபையினர் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

MR. SPEAKER: Motion moved—

"That the Madras Bhoodan Yagna Bill, 1957 (L.A. Bill No. 15 of 1957) as amended be passed."

SRI N. K. PALANISAMI: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவைக் கொண்டுவந்த கனம் மந்திரி அவர்களைப் பாராட்டுகிறேன். ஆனால் அவர்கள் கொண்டுள்ள கொள்கை புதிதாக இருக்கிறது. பூமிதான இயக்கத்தின் மூலமே நிலப் பிரச்னைத் தீர்க்கப்பட்டுவிடும் என்று நேருஜி கூட ஒத்துக்கொள்ளவில்லை; அவ்வாறு வினோபாஜி கூட ஒத்துக் கொள்ளவில்லை; சுமார் 4–5 வருஷங்களுக்கு முன்பு தஞ்சாவூரில் "பூமியை எங்களிடம் கொடுத்துவிடுங்கள். இல்லாவிட்டால் கம்யூனிஸ்டுகள் உங்களிடமிருந்து அதைப் பிடுங்கிக் கொள்வார்கள்" என்று சொல்லி மிராசுதாரர்களிடம் பூமி கேட்கப்பட்டபோது, "கம்யூனிஸ்டுகள் பிடுங்கிக் கொண்டால் பிடுங்கிக் கொள்ளட்டும். நாங்கள் உங்களுக்குக் கொடுக்க மாட்டோம்" என்று அவர்கள் சொன்னார்கள். மேற்கு வங்காளத்தில் கூட, 'இங்கே வினோபாஜி வர வேண்டாம்' என்று சொல்லிவிட்டார்கள். மத்தியதர வகுப்பினர்கள் தான் பூமிதானம் கொடுக்கிறார்கள். நிலப் பிரபுக்கள் பூமி தானம் கொடுப்பதில்லை. பூமிதான இயக்கத்தின் மூலம் இந்நாட்டில் நிலப் பிரச்னையைத் தீர்த்துவிடலாம். என்று வினோபாஜியும் நேருஜியும் கூட நம்பவில்லை. ஆகவே, இந்த மசோதாவை நிறைவேற்றி

15th February 1958] [Sri N. K. Palanisami]

சட்டமாக்கிவிட்டால் போதும் என்றும் வேறு நிலச் சட்டங்கள் கொண்டு வர வேண்டியதில்லை என்றும் நினைக்கக் கூடாது. மேலும் அபிவிருத்திக் கான காரியங்களை சர்க்கார் செய்ய வேண்டும். இந்த மசோதா நிறைவேற் றப்பட்ட பிறகும், பல கஷ்டங்கள் வரும். அபிவிருத்திக்கான காரியங்கள் பற்றி யோசனைகள் சொல்வதற்கான ஒரு சிறு கமிட்டியையோ, கமிஷ னையோ சர்க்கார் நியமிக்க வேண்டும். நிலைமைகளை அவ்வப்போது கவ னித்து அபிவிருத்தித் திட்டங்களைக் கொண்டுவர வேண்டும்; அப்போது தான் நிலப் பிரச்னையைச் சரியாகத் தீர்க்க முடியும். இதற்கான நட வடிக்கையை சர்க்கார் எடுப்பார்கள் என்று நம்புகிறேன்.

SRI P. G. KARUTHIRUMAN : **On a point of explantion, Sir** நேருஜி 45-வது ஸயன்ஸ் காங்கிரசில் பேசும்போது, விநோபாஜியின் கருத்துக்கள் அகில உலகத்தாலும் போற்றப்படுகின்றன என்று சொல்லி யிருப்பதை கனம் அங்கத்தினர் ஸ்ரீ பழனிசாமிக்கு எடுத்துக் காட்ட விரும்புகிறேன்.

MR. SPEAKER : The point of explanation must be with reference to the speech of the hon. member.

SRI P. S. CHINNADURAI : சபாநாயகர் அவர்களே இந்த மசோதா வைச் சட்டமாக்க வேண்டுமென்ற பிரேரேபணையை பிரஜா சோஷலிஸ்ட் கட்சியின் சார்பில் ஆதரிக்கிறேன். பூதான வேள்வி மசோதா என்று இந்த மசோதாவிற்கு நாம கரணம் செய்யப்பட்டுள்ள போதிலும், உண்மையிலேயே, இந்த மசோதா பூதான வேள்வியை நடத்தும் புனிதமான இயக்கத்தில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு உதவி அளிக்கக் கூடிய மசோதாவே என்பதை நம் ஞாபகத்தில்க வைத்துக்கொள்ள வேண்டும். பூதான இயக்கத்தில் ஈடு பட்டுள்ளவர்களுக்கு இந்த மசோதா உதவி புரிகிறது. ஆனால் பூமிதான இயக்கத்தில் நம்பிக்கை வைத்து பூமிதான இயக்கத்தினருக்கு நிலங்களை தானம் கொடுக்க வேண்டுமென்று இந்த மசோதா கூறவில்லை. அவ்வாறு சட்டம் இயற்றுவதும் பூமிதான இயக்கத்தின் கொள்கைகளுக்கு விரோதமானது ஆகும். பூதான வேள்வியின் விளைவை—பலனை—ஏற்றுக்கொள்ளவிருப்பவர்கள் ஏழை மக்கள்தான். இந்த வேள்வியை நடத்துபவர்கள் ஆச்சாரிய விநோபாஜியின் இயக்கத் தைச் சேர்ந்தவர்கள். நாம் இந்த வேள்விக்குக் காப்பாளராகத்தான் இருக்கிறோம். அந்த முறையில் தான் இந்த மசோதாவை நாம் நிறை வேற்றுகிறோம். இந்த மசோதா சட்டமாக்கப்பட்டுவிட்டாலும் கூட, அதன் விளைவாக நம் ராஜ்யத்தின் நிலப் பிரச்னை பூராவும் தீர்ந்துவிடாது என்று கனம் அமைச்சர் கூறியிருப்பதை நான் உண்மையிலேயே வரவேற்கி றேன். நிலப் பிரச்னை பூராவையும், பூதான யக்ஞ சட்டம் தீர்த்துவிடாது என்ற அபிப்பிராயத்துடன்தான் நாம் செயல்படுகிறோம் என்று நம்பு கிறேன். நிலத்தைத் தாங்களே வைத்துக்கொண்டிருக்காமல் உழுது பாடு படுகிறவர்களிடம் அதை ஒப்படைக்க வேண்டுமென்ற மனப்பான்மையை நிலமுடையவர்களிடமும், நமக்கு நிச்சயம் நிலம் கிடைக்கத்தான் போகி றது என்ற மனப்பான்மையை நிலமில்லாத உழவர்களிடமும் உண்டாக்குவ தற்கு பூமிதான யக்ஞம் ஹேதுவாக இருக்கிறது.

இத்தகைய எண்ணம், விரிவான, புரட்சிகரமான, முன்னேற்றகரமான நிலச் சீர்திருத்தத்திற்கு இன்றியமையாதது. இப்படிப்பட்ட ஒரு கருத்து மாறுதல் மிகவும் அவசியமானது, எத்தகைய ஒரு சமுதாய அமைப்பிலே யும் மாறுதல் வேண்டுமானால், நம் சமுதாய அமைப்பிலே, மாறுதலுக்கு அடிப்படையாக விளங்குகிற கருத்து மாறுதலுக்கு ஆதாரமாக விளங்கக் கூடிய பூதான வேள்விக்கு உதவுகிற முறையில் நாம் இந்த மசோதாவை இந்த நாளில் நிறைவேற்றுகிறோம். இந்த மசோதா சட்டமாக நிறை வேற்றப்படும்போது சாதாரணமாக இதற்கு ஆசி கூற வேண்டுமென்று

12-10 p.m.

நான் கருதவில்லை. இதனை நான் வரவேற்ற போதிலும், ஆதரித்த போதிலும் இன்றைய சூழ்நிலை இது என்றென்றைக்கும் சாஸ்வதமாக சட்டத் தொகுப்பில் இருக்கவேண்டுமென்று நான் கருதமாட்டேன். நம் சட்டத் தொகுப்பிலிருந்து இந்த பூதான வேள்வி மசோதா விரைவிலே நீக்கப்படவேண்டிய ஒரு காலம் வரவேண்டுமென்பதே என்னுடைய ஆசை. அந்த ஆசையிலேதான் நான் இதை இப்பொழுது ஆதரிக்கிறேன். நான் இவ்வாறு கூறுவதின் நோக்கம் எந்த நோக்கத்திற்காக பூதானம் ஆரம்பிக்கப்பட்டதோ அந்த நோக்கம் விரைவிலே கைகூட வேண்டும் என்பதற்காகத் தான். பூதான இயக்கம் வெற்றி அடையும்போது, பூதானத்தின் நோக்கம் வெற்றி அடையும்போது இந்த மசோதாவை ஆதாரமாகக் கொண்ட சட்டத்திற்கு ஒருபோதும் அவசியமே இருக்காது. அந்நிலை நம் வாழ்நாளில் ஏற்பட வேண்டும். அதிலும் நாம் வயோதிகத்தை எட்டுவதற்கு முன் வரவேண்டுமென்று தான் நான் இதை ஆதரிக்கிறேன். அந்த நாளை விரைவு படுத்துவதற்கு இந்த மசோதா எந்த அளவில் துணை புரியுமோ அந்த அளவிற்குத் தான் இந்த மசோதா நல்லது என்று கூறிக்கொண்டு நான் இந்த மசோதாவை ஆதரிக்கிறேன்.

**SRI S. LAZAR** : சபாநாயகர் அவர்களே, எனக்கு முன்னால் பேசிய தோழர் பழனிசாமி அவர்கள் எந்த நோக்கத்தோடு இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது என்பதை புரிந்து கொள்ளாதது குறித்து நான் மனம் வருந்த நேரிடுகிறது. ஓரளவு சட்ட அனுபவம் உள்ள நபர்கள் அத்தனை பேரும் இதை ஒத்துக்கொள்கிறார்கள். இன்றையதினம் வினோபா பாவே அவர்கள் நடத்தி வரக் கூடிய இந்த இயக்கமாகப்பட்டது நல்ல முறையில் வளர்ந்து வரக் கூடிய அதே நேரத்திலே அதில் சட்டபூர்வமான சில இடைஞ்சல்களும், சில சிக்கல்களும் இருக்கிற காரணத்தினால் அந்த இயக்கம் மேலும் வளர விடாதபடி தடை செய்கிறது என்ற ஒரு அடிப்படையில் நான் பூமிதான இயக்கத்திற்கு, அவர்கள் செய்யக்கூடிய நல்ல காரியங்களுக்கு ஒரு "ஸ்டாட்யூட்டரி ப்ரொவிஷன்", அதாவது சட்டபூர்வமான ஒரு அங்கீகாரம் கொடுத்து அதற்கு ஆக்கம் அளிக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் தான் இது இங்கு கொண்டு வரப்பட்டிருக்கிறது. அதிலும் குறிப்பாக ஒரு சொத்து நிலம் என்ற முறையிலே பார்க்கும்போது அதற்கு உரியவன் ஒருவன் இருக்க வேண்டும் என்ற முறையில் தான் இப்பொழுது இந்த இயக்கத்தில் அளிக்கப்படுகிற நிலங்களுக்கு சட்ட பூர்வமான உரிமை கொடுத்து அதற்கு உரியவனுக்கு சௌகர்யங்கள் செய்து கொடுக்க வேண்டுமென்று அந்த அடிப்படையில் கொண்டு வரப்பட்ட சட்டமாகும் இது. இதை விட மிக முக்கியமானது ஏதோ ஒரு நிலப் பிரச்னை நாட்டிலே இருக்கிறது. அந்தப் பிரச்னையை இது போன்று சட்டம் கொண்டு வந்தால் அதைத் தீர்த்து விட முடியும் என்ற அடிப்படையில் இது கொண்டு வரப்படவில்லை என்று அமைச்சர் அவர்கள் வெகு அழகாக எடுத்துச் சொன்னார்கள். இவர்கள் சொன்னதுபோல் நாட்டிலே இருக்கக்கூடிய நிலப் பிரச்னை மட்டுமல்ல, எத்தனை எத்தனையோ பிரச்னைகள்இன்று நாட்டில் இருக்கின்றன. ஆனால் இத்தனைப் பிரச்னைகளுக்கும் நல்லதொரு தீர்வு காண வேண்டுமென்று சொன்னால் மக்களிடத்திலே மனப்பான்மை மாறவேண்டும். மனப்பான்மை மாறக்கூடிய நேரத்திலே அயலான் ஒருவன் தன் பிரதிபிம்பம் என்ற அடிப்படையில் இருக்கக்கூடிய கொள்கைகளை நாட்டிலே பரப்பினால் உள்ளபடியே நாட்டிலே இருக்கக் கூடிய பிரச்னைகள் அத்தனையும் தீரும் என்ற அடிப்படையில்தான் இப்பொழுது வினோபா பாவே அவர்கள் இந்த இயக்கத்தை நடத்தி வருகிறார்கள். ஆகவே அந்த முறையில்தான் மனிதனுக்கு மனிதன், உண்மையான மனிதாபிமானத்தை ஏற்படுத்த வேண்டுமென்ற அடிப்படையில் தான் இந்த இயக்கம் நடந்து வருகிறது. ஆகவே தான் அதற்கு சட்ட பூர்வமான அங்கீகாரம் கொடுக்கப்படுகிறது. அதிலும் குறிப்பாக ஆரம்பத்திலே இந்த இயக்கத்தைப் பற்றி குறை கூறியவர்கள் அத்தனை பேர்களும் இன்று அதை வரவேற்கிறார்கள். உலக அரங்கிலே கூட நான் கேள்விப்பட்டேன், அது சரியென்று நினைக்கிறேன், ரோமாபுரியிலுள்ள போப்பாண்டவர் முதற்கொண்டு இதை பரிபூர்ணமாக அங்கீகரித்து அவர் இது சம்பந்தமாக உலகத்தில் உள்ள கத்தோலிக்கர் அனைவருக்கும் ஒரு அறிக்கையும்

15th February 1958] [Sri S. Lazar]

விடுத்திருப்பதாகத் தெரிகிறது. இந்த பூமி தான இயக்கம் உள்ளபடியே உலகத்தில் வளர வேண்டியது முக்கிய அம்சம், இதற்கு பரிபூர்ண ஆதரவு கொடுக்க வேண்டுமென்ற முறையில் உலகில் உள்ள கத்தோலிக்க மக்கள் அனைவருக்கும் அவர் ஒரு செய்தி விடுத்திருப்பதாகவும் தெரிகிறது. ஆகவே, இந்த இயக்கம், ஒரு முக்கியமான ஒரு பிரச்னையைத் தீர்ப்பதற்கு என்று ஏற்பட்டதல்ல. மனித சமுதாயத்தில் உள்ள அத்தனை பிரச்னை களுக்கும் நல்லதொரு அடிப்படை என்ற முறையில் இந்தச் சட்டம் இங்கு கொண்டு வரப்பட்டிருக்கிறது. அப்பேர்ப்பட்ட சட்டத்தைக் கொண்டு வந்த அமைச்சர் அவர்களைப் பாராட்டி என்னுடைய உரையை இத்துடன் முடித்துக் கொள்கிறேன்.

**Sri A. V. P. ASAITHAMBI**: தலைவர் அவர்களே, பூதான இயக்கத்திற்கு திராவிட முன்னேற்றக் கழகம் விரோதமாக இருந்ததேயில்லை. பூதான இயக்கத்தை திராவிட முன்னேற்றக் கழகம் நிச்சயமாக வரவேற்கிறது. பூதான இயக்கத்தின் பிதா என்று கருதப்படுகிற வினோபாஜி அவர்களை எங்கள் கட்சியின் தலைவராகிய அண்ணா அவர்கள் சந்தித்து எங்கள் கட்சி யின் பூர்ண ஆதரவை அதற்கு தருவதாக ஏற்கெனவே ஒப்புக் கொண் டிருக்கிறார்கள். அதோடு, எங்கள் கட்சித் தோழர்களும் அதற்காக வேலை செய்தும் வருகிறார்கள். ஆனால், பூதான இயக்கம் என்பது ஒரேயிடத் திலே குவிந்திருக்கிற நிலங்களை பலருக்கும் கொடுக்கத் தக்க முறையில் செய்யப்படுகிற ஒரு ஏற்பாடு என்றாலும் கூட ஒரேயிடத்தில் குவிக்கப் பட்டிருக்கிற நிலத்தை சட்ட பூர்வமாக இந்த நாட்டிலே பொதுவுடைமை யாக்க சர்க்கார் தயாராக இல்லை என்ற நிலைமையையோ அல்லது சர்க்கார் தயாராக இருந்து மக்கள் அதை ஏற்க முடியாத நிலையிலோ உள்ளதைத் தான் இது குறிக்கும் என்பதை நான் சுட்டிக் காட்ட ஆசைப்படுகிறேன். பூதான இயக்கம் என்று தனிப்பட்டவர்கள் நடத்தி அதற்கு சர்க்கார் ஆக்கம் அளிப்பது என்பது ஒரு மிதவாதமான முறையே தவிர தீவிரமான முறையல்ல என்பதை நான் இங்கு எடுத்துச் சொல்ல ஆசைப்படுகிறேன். சர்க்கார் நினைத்தால் தீவிரமாக சட்டம் போட்டு ஒரு இடத்தில் குவிந்து கிடக்கும் நிலத்தை எடுத்து எல்லோருக்கும் சமமாக பகிர்ந்து கொடுக்க முடி யும். ஆனால் நாடு அதற்கேற்ற பக்குவமான நிலைமையில் இல்லாததால் சர்க்கார் இத்தகைய மிதவாதமான ஒரு கொள்கைக்கு பரிபூரண ஆதரவு அளிக்கக்கூடிய அளவிற்கு வரலாம். எப்படி யிருந்தபோதிலும் இது, நிலம் பகிர்ந்தளிக்கக்கூடிய அளவிற்கு உள்ள முதற்படியாகும் என்பதை நானும் ஒப்புக் கொள்ளுகிறேன். அதை வரவேற்கிறேன். நான் காலையில் அமைச்சர் அவர்கள் பேசியதைப்பற்றி, இங்கு குறிப்பிட்டது, பூதான இயக்கத்திற்கு விரோதமான கருத்து தெரிவிக்க வேண்டும் என்பதற்கல்ல. அமைச்சர் அவர்களின் பேச்சில் முரண்பாடு இருக்கிறதே என்பதற்காகத்தான் எடுத்துச்சொன்னேனே தவிர . . .

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அதைப் பற்றி நான் விளக்கியபோது அங்கத்தினர் அவர்கள் இங்கு இல்லை.

**Sri A. V P. ASAITHAMBI**: இந்த இயக்கத்தில் எங்கள் கட்சிக்கு சம்மதம் அல்லது விருப்பம் கிடையாது என்பதல்ல. காலையில் அமைச்சர் அவர்கள் சொல்லுகிறபோது, நியாயவிலைக் கடைகள் நீடிப்பது என்பது தர்மத்தின் அடிப்படையிலானது, ஆகவே சர்க்கார் அதை நிலைநிறுத்தி வைப்பது சுய மரியாதைக்கு விரோதமாகும் என்று சொன்னார்கள். ஆனால் மனம் இறங்கி நிலம் கொடுப்பதும் தர்மந்தானே ? நியாய விலைக் கடைகளை நீடித்து வைக்க விரும்பாத இந்த சர்க்கார் சொல்கிற விளக்கம், இதை நீடித்து வைப்பதற்கு விளக்கமாக எடுத்துக் கொள்வதுதான் எனக்கு விந்தையாக இருக்கிறது என்று சொன்னேனே தவிர நான் வேறு எந்த தவறுதலான நோக்கத்தோடும் சொல்லவில்லை. பூதான இயக்கத்தை எங்கள் கட்சி ஆதரிக்கிறது. நிலம் ஒரேயிடத்தில் குவிந்து கிடப்பதை எங்கள் கட்சி என்றைக்கும் விரும்பவில்லை. எல்லோருக்கும் நிலம் பகிர்ந்து அளிக்கப்பட வேண்டும். அதையும் சட்ட பூர்வமாக வெகுசீக்

கிரத்தில் கொண்டுவர சர்க்கார் தீவிரமான நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்பதை திராவிட முன்னேற்றக் கழகம் விரும்புகிறது. அதற்கு அஸ்திவாரமாக முதல் ஒத்திகைபோல் இருக்கிற இந்தச் சட்டத்தை திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பாக நான் வரவேற்றுக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

**Sri P. G. MANICKAM :** மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, பூதான இயக்கம் சம்பந்தமாக கொண்டு வரப்பட்டிருக்கும் இந்த மசோதாவை சட்டமாக்க முயற்சி எடுத்துக் கொண்டிருக்கும் அரசாங்கத்தாரையும் சட்ட சபை அங்கத்தினர்களேயும் நான் மனதார பாராட்டுகிறேன். மதிப்பிற்குரிய விேனுபாஜி அவர்கள் இந்த பூதான இயக்கத்தை ஆரம்பிப்பதற்கு ஆதி காலத்தில் காரணமாய் இருந்தவர்கள் ஹரிஜனங்கள் தான். ஹரிஜனங்களில் ஒரு சிலர் விேனுபாஜி அவர்களிடம் சென்று எங்களுடைய குறைகளை நிவர்த்திக்க வேண்டும், நிலமில்லாத எங்களுக்கு நிலம் தர வேண்டும் என்று அவர்களிடம் கேட்டார்கள். அப்போது விேனுபாஜி அவர்கள் நான் இதற்காக பாடுபடுகிறேன், மகாத்மாஜி எதற்காக பாடு பட்டார்களோ, அந்த ஹரிஜன முன்னேற்றத்திற்காக நானும் பாடுபடு
12-20 p.m. கிறேன், மாகாத்மாஜி அவர்களின் அடிச்சுவட்டை பின்பற்றி பாடுபட நான் சித்தமாயிருக்கிறேன் என்று சொல்லி இந்த இயக்கத்தை ஆரம்பித்தார்கள். ஹரிஜனங்கள் கேட்ட அதே நாளில் ஜாதி ஹிந்துக்களிடம் சென்று கேட்டபோது அவர்கள் மனமுவந்து வேண்டிய அளவு நிலம் அந்த கிராமத்தில் கொடுக்க முன் வந்தார்கள். அதில் ஏற்பட்ட சந்தோஷத்தினுல் அந்த இயக்கத்தை மிக ஊக்கமாக நடத்திஞர்கள். அதற்காக சுற்றுப் பிரயாணத்தை மேற்கொண்டார். சுமார் ஐந்து லட்சம் ஏக்கர்களுக்கு மேல் வசூலாயிருக்கின்றன. நிலத்தை வசூல் செய்ததோடு மட்டுமல்ல அதற்காக சட்டங்களை இயற்றியுள்ளார். அதில் கிடைத்திருப்பதில் மூன்றில் ஒரு பங்கை ஹரிஜனங்களுக்கு தரவேண்டுமென்று சொல்லி யிருக்கிருர். ஆகவே இன்று ஏற்படுத்தப்பட்ட மசோதாவிலும் இதை ஏற்படுத்துகிற கமிட்டியிலும் கூட விேனுபாஜி அவர்கள் இயற்றிய அந்த சட்டத்தை, அவர்கள் சொன்ன வார்த்தைக்கு மதிப்பு கொடுத்து, மூன்றில் ஒரு பங்கு ஹரிஜனங்களுக்கு கொடுப்பதற்கு வசதி செய்வார்கள் என்று நம்புகிறேன். அதுதான் அவர்களுடைய குறிக்கோள். மகாத்மாஜி அவர்களின் முதல் சீடஞக விளங்கும் விேனுபாஜி அவர்கள் இயற்றிய அந்த சட்டத்தின் அடிப்படையில் இந்த கமிட்டியும் செயல்படும் என்று நம்புகிறேன். ஆகவே இந்த மசோதாவை ஹரிஜனங்களின் சார்பாக வரவேற்றுக் கொள்கிறேன். இப்போது 50 லட்சம் ஏக்கர்கள் வசூலாயிருப்பதாக தெரிகிறது. இவைகளை ஹரிஜனங்களின் முன்னேற்றத்திற்காக மூன்றில் ஒரு பங்கு அவர்களுக்கு கொடுத்து நல்ல முறையில் இந்த சட்டம் செயல்பட வேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM:** கனம் சபாநாயகர் அவர்களே, நிலம் இல்லாதவர்களுக்கு நிலங்களை வழங்கப்படுவதற்காகத்தான் இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. கிடைக்கின்ற நிலத்தைக் கொண்டு நிலம் இல்லாதவர்களுக்கு கொடுக்கவேண்டும். இதில் நிலம் இல்லாதவர்கள் யார் என்பதைப்பற்றி இதில் **definition** கொடுக்கப்படவில்லை. ஆகவே, இதில் ஜாதிப் பிரச்னையைப்பற்றியும் கிளப்ப வேண்டிய அவசியமில்லை. நிலத்தை வழங்க வேண்டியது, அல்லது யாருக்கு சலுகை காண்பிக்க வேண்டியது என்பதைப்பற்றி விேனுபாஜி அவர்களின் இயக்கத்தை சேர்ந்தவர்களேதான் நிர்ணயிப்பார்கள். இதை உறுதியாக கனம் அங்கத்தினர்கள் யாவரும் நம்பலாம். நான் முன்பு சொன்னேன், இவ்வாறு பூமிதானம், கிராமதானம் போன்றவைகள் அமைக்கப்படுவதினுல் மட்டும் நிலப்பிரச்னை தீர்ந்து விடும் என்று நம்பவில்லை, இந்த சர்க்காரும் நம்பவில்லை. இம்மாதிரியான சட்டங்கள் கொண்டு வருவதினுல் மட்டும் மக்களின் மன நிலை மாற்றமடையாது. பொதுவாகவே மனமாற்றம் அடைய வேண்டும். ஆனல் இம்மாதிரியான சட்டங்கள் மூலம் மக்களிடையே அத்தகைய மனேபாவத்தை ஏற்படுத்த வேண்டும். அதற்கு அனுசரணையாகத்தான் இந்த இயக்கம் நடத்தப்படுகிறது என்று சொன்னேன். அதை

15th February 1958] [Sri M. Bhaktavatsalam]

கனம் அங்கத்தினர் திரு. சின்னதுரை அவர்களும் எடுத்துச் சொன்னார்கள். ஆனால் கனம் அங்கத்தினர் பழனிசாமி அவர்கள் நான் சொன்னதை சரியாக புரிந்து கொள்ளாமல் அவர்களுடைய எண்ணத்தை மாத்திரம் வைத்துக் கொண்டு சொன்னார்கள். எப்பொழுதுமே அவர் தனக்கு மாத்திரம் ஒன்றை நினைத்துக்கெரண்டு பேசுவார்கள். நிலத்தை கொடுத்து விடுங்கள் அல்லது கம்யூனிஸ்டுகள் பிடுங்கி கொள்வார்கள் என்று சொல்லப்படுவதாக சொன்னார்கள். எப்பொழுதுமே அவர்கள் பங்கு போடுவதும், அதில் பங்கு கிடைப்பதைப்பற்றியும் தான் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அதையே எப்பொழுதும் மனதில் வைத்துக் கொண்டு பேசுவதினால் நான் சொன்னதை சரியாக புரிந்து கொள்ளவில்லை. பொதுவான ஒரு மன மாற்றத்தை ஏற்படுத்துவது தான் இந்த இயக்கத்தின் நோக்கமாகும். இந்த நிலையில் இந்த மசோதாவை எல்லோரும் ஆதரிக்கின்றார்கள். ஆகவே, மீண்டும் அங்கத்தினர்கள் யாவருக்கும் என் நன்றியை தெரிவித்துக்கொண்டு, இதை நிறைவேற்றித்தர வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

Sri N. K. PALANISAMI : Sir, on a point of personal explanation, விநோபாஜி அவர்கள் ஒருவரிடத்தில் கேட்டபோது பதில் சொல்லும் போது "கம்யூனிஸ்டுகள் பிடுங்கிக் கொள்வார்கள், அதனால் நிலத்தை எல்லாம் கொடுக்கவேண்டியது தான்" என்று சொன்னதைத்தான் நான் குறிப்பிட்டேன். மந்திரி அவர்கள் வேறு விதமாக நினைத்திருந்தால் அதற்கு நான் பொறுப்பு அல்ல.

Mr. SPEAKER : The question is—

"That the Madras Bhoodan Yagna Bill, 1957 (L.A. Bill No. 15 of 1957) as amended be passed."

The motion was carried and the bill was passed.

Mr. SPEAKER : We will be meeting again at 11 o'clock on the 1st March 1958. On that day I shall call a meeting of the Business Advisory Committee which will decide the hours of the meeting, etc., for the further period of the sesion. If hon. Members want to express anything, they may please write to their respective Leaders who will place them before the Committee. The House is now adjourned to 11 a.m.

The House then adjourned.

## VI.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

A. *Statutory rules, orders and notifications.*

54. *Notification issued with G.O. Ms. No.* 3842, *Industries, Labour and Co-operation, dated* 21*st November*, 1957 *amending the schedule under rule* 84 *of the Madras Factories Rule*, 1950.

B. *Reports and other papers.*

27. *Answer to a supplementary asked by Sri A. Govindaswami on Legislative Assembly Question No.* 281.